# நூற்குறிப்பு


நூலின் பெயர் : **ஆன்ம ஞான இரகசியம்**

ஆசிரியர் : **ஸ்ரீபகவத்**

பதிப்பு : முதற் பதிப்பு - 1997
இரண்டாம் பதிப்பு - நவம்பர் 2008

வெளியீடு : **Sri Bagavath Publication**
102, Court Street, Tiruchendur - 628 215
04639 - 245 377, 099442 15677

விலை : ரூ. 30. ( + 20 தபாலில்)

நூல் வினியோகம் : **வாழ்க வளமுடன் புத் அக மையம்,**
3, வாழ்க வளமுடன் தெரு,
திண்டுக்கல் - 624 001.
0451 - 242 3311, 99769 10825

Web Address : www.nithyapravaaham.org

Er. K. ஜெயகோபால் B.E.
Retd. Executive Engineer / TNEB
வாழ்க வளமுடன் இல்லம், 3, வாழ்க வளமுடன் தெரு,
திண்டுக்கல்-624 001. 0451-242 3311, 99769 10825

## ஆன்ம ஞான ரகசியம் - 2ம் பதிப்பின் பதிப்புரை

வாழ்க வளமுடன்.

தங்கத்தையே பார்த்தறியாத, தங்கத்தின் விலை மதிப்பை அறியாத ஒருவரின் கையில் ஒரு தங்கப் பாளம் இருக்குமானால், 'இது என்ன, இப்படி கனக்கிறது' என்று தூக்கி எறிந்து விட்டுப் போய்விடுவார் அல்லவா? -

அதுபோல ஆன்ம ஞான ரகசியம் புத்தகம் முதல் பதிப்பாக 1997ல் ஆயிரம் பிரதிகளே அச்சடிக்கப்பட்டு, 2008ம் ஆண்டிலும் நூறு பிரதிகளுக்கும் மேல் அச்சகத்திலேயே தேங்கிக்கிடந்தது.

Don't Delay Enlightenment என்று ஆங்கிலத்திலும் **ஞான விடுதலை** என்று தமிழிலும் எழுதப்பட்ட புத்தகங்கள் வெளியானதும்தான், ஆன்ம ஞான ரகசியம் என்ற புத்தகத்தைத் தோண்டி எடுக்க நேர்ந்துள்ளது. ஆன்ம ஞான ரகசியம் 800 பிரதிகளைப் படித்த எவருக்குமே இப்புத்தகத்தின் உயர்வு தெரியவில்லை. அடுத்தவரை 'படித்துப் பாருங்கய்யா' என்று கூட சொல்லவில்லை - தங்கத்தை எறிந்தவர் போல. Better late, than never என்பார்கள். அதுபோல இப்போதாவது சிந்திக்கும் சமுதாயத்திற்கு இப்புத்தகம் கிடைத்திருக்கிறதே என மன நிறைவு கொள்ளவேண்டியதுதான்.

பகவத் ஐயாவின் புத்தங்களைப் படித்து பாராட்டுபவர்கள் எல்லாம் லேசுப்பட்டவர்கள் அல்ல. They are the cream of the society.

'ஞான விடுதலை புத்தகத்திற்கு அற்புதமான அடித்தளம், ஆன்ம ஞான ரகசியம் புத்தகத்தில் அமைக்கப்பட்டுள்ளது' என்கிறார் புலவர் தென்மொழி கல்லை. அருட்செல்வன் ஐயா.

**ஸ்ரீ பகவத் ஐயாவின் கவலைகளுக்கெல்லாம் தீர்வு**
என்ற புத்தகத்தின் மதிப்புரை

தென்மொழி **கல்லை. அருட்செல்வன்.**
(புலவர் க. நா. கருணாநிதி க.மு., கல்.இ.) .
ஒட்டன்சத்திரம் - 624619.

*"இன்னாது அம்ம இவ் உலகம்*
*இனிய காண்க இதன் இயல்பு உணர்ந்தோரே"* - என்பது புறநானூற்றுப் புலவர் **பக்குடுக்கை நன்கணியாரின்** பா அடிகள்.

'இந்த உலகம் துன்பம் நிறைந்தது. எனினும் இதன் இயல்பினை உணர்ந்தவர் இதனை இனியதாகவே காண்பர்' என்பது ஒரு பெருமைக்குரிய உண்மையாகும்.

இன்பம் என்னும் திசைநோக்கி இயங்குவதே இவ் உலகத்து உயிர்கள் அனைத்திற்கும் பொதுவான இயல்பாகும்.

உயிர்களுள் மேம்பட்ட உயர்திணை மாந்தர், தாமும் இன்புற்று பிற உயிர்களையும் அவ்வாறே இயக்கி இன்புறுத்தி இன்புறுவர். அதுவே மக்கட் பண்பு ஆகும்.

*தாம் இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு*
*காமுறுவர் கற்றறிந் தார்* - என்பது வள்ளுவர் வாய்மை.

இத்தகைய மாட்சிமை மிக்கவரே வேடம், விளம்பரம், ஆடம்பரம், ஆரவாரம், சொற்கவர்ச்சி, பொருட்கவர்ச்சி என எதற்கும் ஆட்படாத பேராதன் (மகாத்மா) நிலைக்கு உரியவர் ஆவர்.

காலங்கள்தோறும் இடம் பொருள் ஏவல் சார்ந்து தோன்றும் இத்தகு திருக்கூட்ட மரபில், இக் கால விரைவுக்கேற்பவும் தேவைக்கேற்பவும் அரிய செய்திகளை எளிதில் புரியும்படி உணர்த்திவரும் ஒருவர் திருவார் பெருந்தகை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

ஆதனியல் மெய்மங்கள் (ஆன்மீகத் தத்துவங்கள்), 'அறிவதற்கு அரியன, மருட்சி தருவன, பெரும் முயற்சிக்கு உரியன' என்றே பலரும் கருதுவர். ஆனால், 'அவை புரிதற்கு எளியன, மகிழ்ச்சி தருவன, அயர்ச்சி தராதன' என்று வியத்தகு முறையில் விளக்கி '**ஞான விடுதலை**' என்னும் புதுமைநூல் வழியாக ஒளியை நோக்கிய வழியில் ஒளிபாய்ச்சியுள்ளார்.

அந் நூலில் 'ஆதனியம் (ஆன்மீகம்) சார்ந்து பலரும் விடாது அல்லது விட்டு விட்டு மேற்கொண்டு வந்த, வருகின்ற முயற்சிகளில் பல,

முழுமைப் பயன் தருவனவல்ல' என்பன போலும் விளக்கங்கள் நம்மை நின்று அமைந்து சிந்திக்க வைக்கின்றன. அவர் காட்டும் சீரிய வழியை உளங்கொளச் செய்கின்றன. உய்வுப் பாதையில் உய்த்திடுகின்றன.

அறிவியல் எழுச்சி மிக்கோங்கி நிற்கும் இக்காலத்தில் '**ஆதனிய அறிவியல்' (Spiritual Science)** மிக எளிதாகப் புரிந்து கொள்ளக்கூடியது' என்று இவர் கூறும் உண்மை நமக்குக் களிப்பூட்டுகிறது.

அதனைத் தொடர்ந்து, ஆதனியலில் அழகுற அமைந்துள்ள அறிவியல் தன்மைக்குப் பொருந்தும்படி **கவலைகளுக்கெல்லாம் தீர்வு** என்னும் இந்நூலைத் தந்துள்ளார். இதன்வழி இயல்பு நிலையில் உணரப்படும் துன்ப துயரங்களை இன்பமாய் ஏற்றுக்கொள்ளும் பண்பு நிலைக்கு உயர்த்துகின்றார்.

தெய்வப் புலவர் திருவள்ளுவரின் 'இடுக்கண் அழியாமை' (கடுந்துன்பத்திலும் மனம் கலங்காமை) அதிகாரத்திற்கு இந் நூல் ஒரு செயல்முறை விளக்கப் பகுதியாக **(Practical Part)** அமைந்திருப்பதாக நாம் உணர்கிறோம்.

எடுத்துக்காட்டாக, 'இடுக்கண் வருங்கால் நகுக' என்கிறார் வள்ளுவர்; ஆனால்,

*"துன்பம் வரும் வேளையிலே சிரிங்க - என்று*
*சொல்லி வச்சார் வள்ளுவரும் சரிங்க*
*பாம்பு வந்து கடிக்கையிலே பாழும் உயிர்துடிக்கையிலே*
*யார் முகத்தில் பொங்கிவரும் சிரிப்பு?"* - என்று ஒரு திரைப்பாடல் குழம்பிப் புலம்புகிறது.

'இது எப்படி இயலும்?' என்றே எவர்க்கும் கேட்கத் தோன்றும்.
எனினும், 'இப்படி முடியும்' என்று '**புரிய**' வைக்கிறது இந்நூல்.

*'வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்*
*உள்ளத்தின் உள்ளக் கெடும்'* - என்ற வள்ளுவர் மொழியை எடுத்துக் கொள்வோம்.

'இடும்பையாவது (துன்பம் என்பது) *உள்ளத்து ஒரு கோட்பாடேயன்றிப்* பிறிதில்லை' என்கிறார் **பரிமேலழகர்.**

வெள்ளம்போல் பெருகிவரும் ஏராளமான துன்பத்தினை வெல்வதற்கு இக் குறளில் கூறப்படும் செயல்முறை *'அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும்'* என்பது.

அறிவு உடையவன், அவற்றால் துன்பங்களால் *ஒன்றுமில்லை* என்று தன் மனத்தில் நினைத்தமட்டில் நீங்கிவிடும் என்று உரைகூறும் **பாவாணர்** 'உள்ளக் கெடும்' 'என்பதற்கு 'துன்பத்தை வெல்லும் விரகு

(உபாயம்) *ஒரு நொடி நேர நினைவே'* என விளக்கம் கூறுகிறார்.

Adversity operates on the mind and, therefore, a resolute mind may effectively stem a whole sea of troubles. The wise man's thought processes are potent enough to overcome even a host of adversities. **It is the mental attitude that is really important.**- (Dr.S. M. Diaz, IPS., Ph.D.)

உளத்தியல் அடிப்படையிலேயே துன்பத்தினின்று விடுபட இயலும். இந் நூலைப் படிப்படியாகப் படித்துக் கொண்டே வருகையில் ஒரு நிலையில் சட்டென ஒரு புரிதல் - ஒரு விழிப்பு ஏற்படுகிறது. அந்த நொடி நேர நினைவு எனும் வியப்பு நிகழ்கிறது.

இக்கால வாழ்வு பல வகைச் சிக்கல்களால் பின்னப்பெற்றுள்ளது. அதனால்தான் 'வாழ்வியல் நூல்கள்' மிகப்பலவாக வெளியாகிக் கொண்டே உள்ளன. குறிப்பாக மேல்நாட்டு அறிஞர்களின் நூல்களை மொழிபெயர்த்தும் தழுவியும் எழுதியவற்றால் பொத்தகச் சந்தை நிரப்பப்பெற்றுள்ளதைக் காண்கிறோம்.

அவை மனத்தையும் அதனைக் கையாளும் முறைகளையும் பற்றிக் கூறும் பெரும் நூல்களாக உள்ளன. அவற்றுள் பல படிப்பதற்கு மலைப்பும் அயர்ச்சியும் தருவனவாய் உள்ளன.

அன்றியும் வாழ்வியலைப் பொருளியல் வளர்ச்சி சார்ந்து பெரும்பாலும் புறநோக்கில் விளக்குவனவாகவும் உள்ளன.

மேலும் ஆதனியம் (ஆன்மீகம்) சார்ந்த கொள்கைகளும் பயிற்சிகளும் பற்பல கோணங்களில் பலபடப் பரப்பப்பட்டு வருகின்றன. இப் போக்கினால் ஆதனியமும் வணிகமயமாகிவிட்ட நிலை ஏற்பட்டுள்ளது.

இந் நிலையில் இராமகிருட்டிண பரமகம்சரைப் போல் எளிய உவமைக் கதைகளைக் கூறி, எட்ட வேண்டிய இலக்கிற்கு எளிதில் இட்டுச் செல்லும் அகம்நோக்கிய பாங்கு இந் நூலின் தனிச் சிறப்பாகும்.

கணியன் பூங்குன்றனார் 'ஆருயிர் முறைவழிப் படூஉம்' எனத் தெளிந்துரைத்த பேருண்மையாகிய அமைதிச் செந்நிலை (Serenity) நம்முள் தோன்றி நிலைத்திடத் தோன்றாத் துணையாக உள்ளது இந்நூல்.

**எதையெதையோ வெல்வதற்கு என்னென்ன வோசெய்து**
**பதைபதைப்பாய் வாழ்வைப்பாழ் செய்து - புதைவதுவோ?**
**எண்ணுவதும் ஓர்கணமே திண்ணமெனில் இன்னலெதும்**
**நண்ணுவதும் உண்டோ நவில்.**

# முன்னுரை

பொதுவாக ஆன்ம ஞானம் அனைத்தும் இரகசியங்களாகவே போதிக்கப்பட்டு வருகின்றன. பல செய்திகள் மறைபொருளாகக் கூறப்பட்டுள்ளன.

அதே வரிசையில் உங்களுக்குத் தரப்படும் இந் நூலின் செய்திகளும் இரகசியங்களாகவே தரப்படுகின்றன.

இரகசியம் என்றால் எதுவும் கூறாமலேயே இருந்திருக்கலாமே. வெளியே சொல்லிவிட்டுப் பிறகு இரகசியம், இரகசியம் என்று சொன்னால் என்ன அர்த்தம்?

இரகசியம் என்ற முத்திரை அதைக் கேட்பவருக்குத்தான் குத்தப்பட்டுள்ளது. கேட்பவர்தான் அதற்கு இரகசியம் என்ற மரியாதை கொடுத்து அதனைக் காப்பாற்ற வேண்டும்.

ஏன் இந்த இரகசியக் காப்பு பிரமாணம்?

ஆன்மீக உண்மைகள் யாவும் அளப்பரிய சக்திகளை உள்ளடக்கமாகக் கொண்டவைகளாகும். அவற்றை நாம் நமக்குள்ளே ஓர்ந்து உணர்ந்து கொண்டால் மட்டுமே நம்முடைய அடிப்படை உணர்வு நிலைகள் மாறி அமையும்.

அதற்கு இடங்கொடுக்கும் வகையில் -

அந்த உண்மைகளை நமக்குள்ளே நிறுத்திக் கொள்வதற்காகத்தான் இந்த இரகசியக் காப்பு,

நீங்கள் இதுவரை எத்தனையோ ஆன்மீக நூல்களைப் படித்திருப்பீகள். எத்தனையோ கருத்துகளில் தெளிவு பெற்றிருப்பீர்கள்.

சற்று நேரத்துக்கு மட்டும் -

அவற்றை ஒதுக்கிவைத்துவிட்டு இந்தப் பயணத்தை மேற்கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

இங்கு நீங்கள் அறிந்துகொள்வதையெல்லாம் ஏற்கெனவே அறிந்துகொண்டிருப்பவைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்து பார்க்கத் தோன்றும்.

ஏற்கனவே நீங்கள் நன்கு அறிந்து வைத்துள்ள கருத்துகளை இங்கு நாம் புதிதாக அறிந்து கொள்ளவிருக்கும் செய்திகளின் மீது சுமத்தும்போது -

இங்குத் தரப்படும் செய்திகளுக்கு உயிர்த்தன்மை கிடைக்காது; திக்குமுக்காடி அழிந்து போய்விடும்.

அதே நேரம் -

இங்கு தரப்படும் செய்திகளின் உயிர்த்தன்மைக்கு ஊறுவிளைவிக்காத வகையில், உங்களுடைய பிற கருத்துகளையும் செய்திகளையும் மென்மையாகக் கையாளும்போது -

உண்மைக்கு நலிவு ஏற்படாது;

பொலிவுதான் ஏற்படும்.

இனி,

இதனுள் பயணத்தை மேற்கொள்ளலாம்.

ஆனால் -

பயணம் செய்ய வேண்டியது,

நாம் அல்ல.

நீங்கள்மட்டும்தான் -

**தன்னந்தனியாக.**

வெற்றியும் தோல்வியும் உங்களை மட்டுமே சேர்ந்தது.

உங்கள் பயணம் வெற்றி பெற நல்வாழ்த்துகள்.

- ஆசிரியர்

- 1997ஆம் ஆண்டு



# பொருளடக்கம்





# 1. ஆன்மீக விஞ்ஞானம்

மதங்கள் பல இருக்கின்றன; மனித குலத்தை வழி நடத்துகின்றன. ஒவ்வொரு மனிதரும் ஒவ்வொரு மதக் கோட்பாட்டினைப் பின்பற்றுகிறார்.

'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்.'

'கடவுள் ஒன்றே; ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு பெயரால் கடவுளைக் குறிப்பிடுகிறது.'

'எல்லா மதங்களும் ஒரே உண்மையையே போதிக்கின்றன.'

- இப்படியெல்லாம் கூறப்படுகின்றன. இவையெல்லாம் உண்மைதானா?

மதங்கள் அனைத்தும் ஒரே செய்தியைத்தான் சுட்டிக்காட்டுகின்றனவா?

- அப்படி இருந்தால் மதங்களுக்குள் ஏன் முரண்பாடுகள், சச்சரவுகள் ஏற்படவேண்டும்?

இதற்கு முடிவு காண்பதற்கு முன் -

ஏதாவது ஒரு மதத்தை எடுத்துக்கொள்வோம். ஏன், உங்களுக்குத் தெரிந்த உங்களுடைய மதத்தையே எடுத்துக்கொள்வோம்.

உங்கள் மதத்தைப்பற்றி எத்தனை சதவீதம் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்?

மதக்கொண்டாட்டங்களைப்பற்றிக் கேட்கவில்லை. கொலை, களவு, பொய், காமம், சினம் கூடாது என்ற ஒழுக்க விதிமுறைகளைப்பற்றிக் கேட்கவில்லை.

உங்களுடைய ஆன்ம விளக்கத்தைப்பற்றி உங்கள் மத நூல்கள் என்ன கூறுகின்றன?

நீங்கள் சொல்லலாம். 'எனது மதம் இறைவனைப் பற்றிச் சொல்கிறது; அவர் மீது அன்பு செலுத்தவேண்டும் என்று சொல்கிறது; ஆழமாக - மிக ஆழமாக - அன்பு செலுத்தச் சொல்கிறது; அவரே கதி என்று பரிபூரணமாக சரணடையச் சொல்கிறது.'

- நீங்கள் இப்படிச் சொல்லலாம்.

இது எல்லா மதங்களிலும் கூறப்பட்ட வெளிப்படையான அம்சம். இதில் சந்தேகப்படுவதற்கோ ஆய்வு செய்வதற்கோ எதுவும் இல்லை. மிகவும் வெளிப்படையான செய்தி.

இவை மட்டுந்தான் உங்கள் மத நூல்களில் கூறப்பட்டுள்ளனவா?

உங்கள் மத நூல்களை இன்னும் சற்றுத் துழாவிப் பாருங்கள்.

உங்கள் மத நூல்களில் மறைபொருளாகப் பல விபரங்கள் கூறப்பட்டுள்ளன. எல்லா விபரங்களும் வெளிப்படையாகக் கூறப்படாமல் சில மறைபொருளாகக் கூறப்பட்டுள்ளன. மறைக்கவேண்டும் என்ற நோக்கத்தில் அன்று. எடுத்த எடுப்பிலேயே நீங்கள் குழம்பிவிடக்கூடாது என்பதற்காகவும் படிப்படியாகத் தெரிந்துகொள்ளட்டும் என்பதற்காகவும்தான்.

உங்கள் மத நூல்களை இன்னும் ஒரு முறை படித்துப் பாருங்கள். எனது மதத்தைப் பற்றி எனக்குத் தெரியாதது என்ன இருக்கிறது என்ற - மேம்போக்கான - எண்ணத்தை ஒதுக்கிவைத்துவிட்டு, புதுமைக் கண்ணோடு இன்னொரு முறை உங்கள் மத நூல்களைப் படித்துப்பாருங்கள்.

அப்போது நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். உங்கள் மதத்தில் வெளிப்படையாகக் கூறப்பட்டதைவிடப் பலமடங்கு மறைபொருளாகக் கூறப்பட்டுள்ளது என்பதை.

ஒரு சிறிய உதாரணம்.

படிக்கட்டுள்ள ஒரு பெரிய குளம் நிறைய தண்ணீர். நீரின் அடி ஆழத்தினுள் ஆபரணம் ஒன்று வீழ்ந்துகிடக்கின்றது. அதனை எடுக்க படிக்கட்டுகளின் வழியே நீரினுள் இறங்குகிறீர்கள். கீழ்நோக்கி இறங்க இறங்க உங்கள் உடம்பின் ஒவ்வொரு பகுதியாக நீருக்குள் அமிழ்ந்து கொண்டே வருகிறது. அடுத்த படியில் நீங்கள் காலை வைக்கவும் தண்ணீர் உங்கள் மார்பளவுக்கு வருகிறது. இன்னும் இறங்க இறங்க நீர்மட்டம் கழுத்தளவுக்கு வந்து பிறகு உங்கள் தலையும் தண்ணீருக்குள் மூழ்கிவிடுகிறது. நீங்கள் மூச்சை அடக்கிக்கொண்டு இன்னும் ஒரு படி இறங்குகிறீர்கள். இப்போது நடப்பதென்ன?

அடுத்த படியின் மீது கால் வைத்து உங்களால் இறங்க முடியாது என்பது உங்களுக்குத் தெரிந்துவிடும். தண்ணீரின் மிதப்பு விதியை அனுசரித்து உங்கள் உடல் மேல் நோக்கி மிதக்கத் துவங்குகிறது. அது மேல் நோக்கி உங்களைத் தள்ளுவதால், கீழ்நோக்கி உங்களால் இறங்க

முடியாது. இனியும் தண்ணீரின் அடி ஆழத்துக்குப் போகவேண்டும் என்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்?

நீங்கள் தலைகீழாகத் திரும்பி கைகளால் நீந்தித்தான் தண்ணீரின் ஆழத்தினுள் செல்ல முடியும். இதுவரை கால்களை உபயோகித்துப் படிகளில் இறங்கி வந்தீர்கள். அதன் பிறகு கால்களால் பயன் இல்லை. கைகளைப் பயன்படுத்துகிறீர்கள். நேராக இறங்குவதைவிட தலைகீழாகக் கீழ்நோக்கி நீந்துவதுதான் வசதியாக உள்ளது.

இதுபோன்றுதான் நமது மதக்கோட்பாடுகள் அமைந்துள்ளன. ஒருநிலை வரை நேர்முகமாகச் செயல்பட முடியும். வெளிப்படையான செய்திகளே நமக்குக் கொடுக்கப்படும்.

அதன் பிறகு நமக்குக் கொடுக்கப்படும் கோட்பாடுகள் புதிரானதாக இருக்கும்; எதிர்மறையாக இருக்கும்; வெளிப்படையாக எதுவும் சொல்லப்படாது.

இதுதான் நமது மதத்தின் இரண்டாவது பரிமாணம்.

நமது மதத்தின் வெளிப்படையான கருத்துகளை மாத்திரம் நாம் தெரிந்து வைத்திருந்தால், நாம் பள்ளிக் கூடத்தின் வாயில்வரை மட்டுமே வந்ததைப் போன்ற நிலைதான்.

இந்த இரண்டாவது பரிமாணத்துக்குள் நீங்கள் நுழையும் போதுதான் உங்கள் மதம் எதற்காகக் கொடுக்கப்பட்டுள்ளதோ அது உங்களுக்குள் செயல்பட ஆரம்பிக்கின்றது.

மதத்தின் இரண்டாவது பரிமாணம் என்பது என்ன?

மதத்தின் முதலாவது கட்டம் நமது உடலையும், உள்ளத்தையும் நெறிப்படுத்த போதனை செய்கிறது. உடல் ஒழுக்கம், உள்ளத்தின் ஒழுக்கம், நாம் ஒருவரோடு ஒருவர் கொள்ளவேண்டிய இணக்கம் ஆகியவைப்பற்றி போதிக்கின்றது.

இரண்டாவது பரிமாணம் –

உடல், உள்ளம் பற்றிய செய்திகளை ஒதுக்கிவிட்டு, நமது ஆன்மாவைப்பற்றிக் கூறுகின்றது.

**இங்கு உண்மை மட்டுமே போதிக்கப்படுகிறது; பொய்மை என்பது மருந்துக்குக் கூடக் கிடையாது.**

மதத்தின் முதலாவது கட்டத்தில், கற்பனைகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் இடம் கொடுக்கப்படும். இதனால் மதங்களுக்கிடையேயுள்ள கதைகளும் நம்பிக்கைகளும் மாறுபட்டே இருக்கும்.

ஆனால் -

மதத்தின் இரண்டாவது பரிமாணமான ஆன்மீகத்தில், இந்தக் கற்பனைகளுக்கோ கதைகளுக்கோ நம்பிக்கைகளுக்கோ இடம் கிடையாது.

இங்கு எதையும் நம்பச் சொல்லி வற்புறுத்துவது இல்லை. இங்கு அனைத்துமே நிதர்சனமான உண்மை. எதையும் கற்பனை செய்யவேண்டிய தேவை இல்லை. உங்கள் கண்களின் முன்னால் உள்ள பொருளை, உங்கள் கண்களால் நீங்களே நேரில் பார்த்துக்கொள்ள முடியும்போது நீங்கள் ஏன் கற்பனை செய்யவேண்டும்?

இந்த இரண்டாவது பரிமாணமான ஆன்மீகம், விஞ்ஞானபூர்வமானது; நிதர்சனமானது; உண்மையானது; நிச்சயமானது; கற்பனை கலக்காதது; நிரந்தரமானது; எப்போதும் உள்ளது; இப்போதும் இருப்பது.

இந்த விஞ்ஞான ஆன்மீகமே - இந்த ஆன்மீக விஞ்ஞானமே - எல்லா மதங்களுக்கும் அடித்தளமாக உள்ளது.

உங்கள் மதம் உங்களுக்குக் கொடுக்கப்பட்டதன் நோக்கம், உங்கள் மதத்தின் அடித்தளமாக அமைந்திருக்கும் இந்த ஆன்மீக விஞ்ஞானத்தை நீங்கள் அறிந்து கொள்வதற்கேயாகும்.

இந்த அடித்தளம், உங்கள் மதத்திற்கொன்று, மற்ற மதத்திற்கு வேறொன்று என்று அமைந்திருக்கவில்லை. எல்லா மதங்களுக்கும் ஒரே அடித்தளந்தான்.

புவிஈர்ப்பு சக்திபற்றிய விஞ்ஞானப் பாடத்தை ஒரு பள்ளிக்கூடத்தில் ஒரு விதமாகவும் மற்ற பள்ளிக்கூடங்களில் வேறு விதமாகவும் சொல்லிக்கொடுப்பதில்லை. ஆசிரியர் வேறுபடலாம்; பாடப்புத்தகங்கள் வேறுபடலாம்; ஆனால் புவிஈர்ப்பு சக்தியின் தத்துவ உண்மை வேறுபடாது. ஆகவே புவிஈர்ப்பு சக்தி பற்றிய விபரமோ விளக்கமோ தேவை என்றால் நீங்கள் எந்த ஆசிரியரையும் அணுகிக் கேட்டுக்கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட ஆசிரியர் சொல்வதை மட்டும்தான் கேட்பேன் என்று சொல்லவேண்டியதில்லை. நீங்கள் அறிய வேண்டிய பொருளைப்பற்றிய செய்தி எங்கிருந்து வந்தாலும் அதனை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்பீர்கள். புவிஈர்ப்பு சக்தி பற்றி நீங்கள் நம்பிக்கை எதுவும் கொள்ளத் தேவையில்லை. அப்படி நம்பிக்கை கொள்ளவேண்டியது ஏற்பட்டால் ஒருவர் சொல்வதைத்தான் நம்பவேண்டியது நேர்ந்துவிடும். விஞ்ஞான் உண்மைகள் நம்பிக்கையை

ஆதாரமாகக் கொண்டவை அல்ல. புவிஈர்ப்பு சக்தி பற்றி நீங்கள் நம்ப வேண்டும் என்று எவரும் கூறுவது இல்லை. புவிஈர்ப்பு சக்தி என்பது ஒரு நிதர்சனமான உண்மை. அதை நீங்களாகவே அறிந்துகொள்ள முடியும்.

ஆசிரியர்கள் உங்களுக்கு உதவி செய்யலாம். அறிந்து கொள்ள வேண்டியது நீங்கள். நீங்கள் நம்பிக்கை கொள்ளவேண்டுவது இல்லை. நம்பிக்கை என்பது கற்பனை கலந்தது. உண்மையைத் திசை திருப்பும் தன்மை கொண்டது. உங்களுக்குப் பார்க்கும் திறன்கொண்ட கண்கள் உள்ளன என்பதனை நீங்கள் நம்பவேண்டியதில்லை. அது உங்களுக்கே நேரடியாகத் தெரியும். **உண்மைகளுக்கு நம்பிக்கை என்ற ஆதாரம் தேவையில்லை.**

விஞ்ஞான உண்மைகள் அனைத்தும் நிதர்சனமான நடைமுறை உண்மைகள். அவற்றை யார் வேண்டுமானாலும் தங்களுக்குத் தாங்களே சோதித்து அறியமுடியும். அவர் சொல்வதால் நம்புகிறேன் என்று கூறிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

இந்த ஆன்மீக விஞ்ஞானம் என்பது உங்களை மட்டுமே மையமாகக் கொண்டது. நம்புகிறேன் என்ற நிலைமையே இங்கு கிடையாது.

உங்கள் மதத்தின் இரண்டாவது பரிமாணமான இந்த ஆன்மீக விஞ்ஞானம், உங்கள் மதத்திற்கு மட்டுமின்றி அனைத்து மதங்களுக்குமே பொதுவானது.

அந்த ஆன்மீக விஞ்ஞானத்தைப் பற்றி அறிய வேண்டுவதுதான். நாம் அறிய வேண்டியது.

மற்றைய அனைத்துமே முக்கியத்துவம் இல்லாதவையே.

நாம் ஒவ்வொருவரும் ஆன்ம சொரூபம் என்று கூறப்படுகிறது. நாம் அனைவரும் ஆன்மாக்களே என்று தெரிவிக்கப்படுகிறது.

நாம் யார்?

நாம் - உடலா?

உயிரா?

ஆன்மாவா?

நம்மைப் பற்றி நாம் யாரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்? நம்மைப்பற்றி நமக்கே தெரியாதா?

நாம் ஆன்மா என்பதை மற்றவர்கள்தாம் நமக்கு உணர்த்த வேண்டுமா?

இந்த ஆன்மா நமக்குள் எவ்வாறு இயங்குகிறது? அது ஏன்

நமக்குள் விளக்கம் பெறாமல் மறைந்து கிடக்கிறது?

**ஆன்மா.**

ஆன்மா என்னும் வார்த்தையின் மூலம் நாம் என்ன புரிந்து கொள்கின்றோம்?

ஆன்மா என்பது ஓர் உயிர்த் தன்மை; ஆன்மா என்பது ஓர் உணர்வுத் தன்மை; ஆன்மா என்பது ஒரு சக்தி மயமான தன்மை... ஓர் இயக்கம்.

ஆன்மா ஜடத்தன்மையுடையது அல்ல; கற்பனைத் தோற்றமுடையதும் அல்ல. அப்படியானால் ஏன் அதை வெளிப்படையாகத் தெரிந்துகொள்ள முடிவதில்லை.

ஒரு சிறிய உதாரணத்தைப் பார்ப்போம்.

ஒரு நீர்த் தடாகம் பரந்து விரிந்துகிடக்கின்றது. சலனமற்ற நீர் தெளிந்து கிடக்கின்றது. தடாகத்தின் மறுகரையில் மிகப் பெருங் குவியலாக தீ எரிந்து கொண்டிருக்கின்றது. இக்கரையிலிருந்து பார்க்கும்போது தடாகம் முழுவதும் தீ எரிவது பிரதிபலிக்கின்றது. நீருக்குள் தீ எரிவது போன்று தெரிகின்றது. நீரும் நெருப்பும் சேர்ந்திருக்கமுடியுமா? ஆனால் நீருக்குள் நெருப்பு எரிவதுபோல் தோன்றுகிறது. இப்போது நீருக்குள் நாம் இறங்குவோமானால் அதற்குள் எரியும் நெருப்பு நம்மைப் பொசுக்குமா? நிச்சயமாக அது நம்மைப் பொசுக்காது. ஏனெனில் அது வெறும் பிரதிபலிப்புதான். ஆனால் நீருக்குள் தெரிவதை உண்மையான நெருப்பு என நாம் கருதுவோமானால், நாம் நீருக்குள் இறங்க மறுத்து விடுவோம். அது நம்மை எரித்து விடும் எனப் பயந்துவிடுவோம்.

- இந் நிலையிலேயே நமக்குள் ஆன்ம தத்துவமும் அதை மறைக்கும் மாயைத் தத்துவமும் செயல்பட்டு வருகின்றது.

அழிவற்ற ஆன்மா, நமது உடலுக்குள் இருக்கும்போது அழியக்கூடிய ஒன்றாகத் தோன்றுகின்றது. பிறப்பற்ற ஒன்று பிறப்புடைய ஒன்றாகத் தோன்றுகின்றது.

நமக்குள் ஆன்ம தத்துவமும் செயல்படுகின்றது; மாயைத் தத்துவமும் செயல்படுகின்றது. எவையெல்லாம் ஆன்ம தத்துவம், எவையெல்லாம் மாயைத் தத்துவம் என்பதை நாம் அறிந்திருக்கிறோமா?

நாம் உணர்வதெல்லாம் ஆன்ம தத்துவம்.

நமது நினைவுகளெல்லாம் மாயைத் தத்துவம்.

நமது உணர்ச்சிகளெல்லாம் ஆன்ம த்த்துவம்.

## 2. மாயை என்றால் என்ன?

**'உலகம் என்பது மாயை. நாம் காண்பதும் பொய்; அனுபவிப்பதும் பொய்; எல்லாம் மாயை.'**

- இவ்வாறு கூறப்படுகிறது.

இது எந்த அளவில் உண்மை?

ஆயிரங்கோடி உயிரினங்கள் வசிக்கின்றன; இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன; இரவும் பகலும் ஏற்படுகின்றன.

இவையெல்லாம் உண்மை இல்லையா?

இதோ,

நீங்களும் நானும் உயிரோடு உலாவுகிறோம்.

நீங்களும் நானும் பொய்த்தோற்றங்களா?

நாம் நிதர்சனமாகக் காணும் காட்சிகள் அனைத்தும் மாயை என்று கூறுவதில் பொருள் ஏதேனும் உண்டா?

உலகம் என்றால் என்ன, நாம் நிதர்சனமாகக் காணும் காட்சிகள் என்பவை எவை என்பதனைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

முதலில் ஒரு சிறிய உதாரணம்.

ஊருக்கு வெளியே உள்ள ஒரு பூங்காவில் ஒருவர் - முதலாவது நபர் - தனது நண்பருக்காகக் காத்திருக்கிறார். சூரியன் மறையத் துவங்கியதும் தூரத்தில் ஒருவர் வருகிறார். அவர்தான் இரண்டாவது நபர். முதலாம் நபர் தூரத்தே வரும் இரண்டாம் நபரைப் பார்க்கிறார். நண்பரை எதிர்பார்க்கிறார். நண்பரை எதிர்பார்த்துக் காத்திருக்கும் அவருக்கு தூரத்தே வரும் இரண்டாவது நபர் தனது நண்பர் போன்றே தோன்றுகிறார். மறு பக்கத்தில் இன்னொரு நபர், முதலாம் நபர் இருக்கும் திசையை நோக்கி வருகிறார். அவர்தான் மூன்றாவது நபர். அவரும் தூரத்தே வரும் இரண்டாவது நபரைப் பார்க்கிறார். மூன்றாவது நபருக்குப் பேய், பிசாசுகளின் மீது நம்பிக்கை உண்டு. சூரியன் மறைந்த நிலையில் தூரத்தே வரும் இரண்டாவது நபர் ஓர் ஆவியாக இருக்குமோ என அவர் சந்தேகப்படுகிறார். அதனை உறுதி செய்வதுபோல், மிகவும் தூரத்திலிருந்து பார்க்கும்போது இரண்டாவது நபர் காற்றில் மிதந்து வருவதுபோல் தோன்றுகிறார். இரண்டாவது நபர், முதலாவது நபரின்

கண்களுக்கு நண்பராகத் தோன்றுகிறார். மூன்றாம் நபரின் கண்களுக்கு ஆவியாகத் தோன்றுகிறார்.

தற்போது இரண்டாவது நபரும், மூன்றாவது நபரும் முதலாம் நபரின் பக்கத்தில் வந்துவிடுகிறார்கள். ஒருவரை ஒருவர் சரியாகத் தெரிந்துகொள்கிறார்கள். இரண்டாவது நபர், முதலாம் நபர் எதிர்பார்த்த நண்பரும் இல்லை; மூன்றாம் நபர் எண்ணியது போல் ஆவியும் இல்லை. அவர் யாரோ ஒரு வழிப்போக்கர். ஆனால் முதலாவது நபரின் கண்களுக்கு அவர் நண்பராகவும் மூன்றாவது நபரின் கண்களுக்கு ஆவியாகவும் தோற்றமளித்திருக்கிறார்.

உண்மை வேறு; நமது அனுபவம் வேறு.

நண்பரே அல்லாத ஒருவர், ஒருவருக்கு நண்பராகத் தோன்றுகிறார்; இன்னொருவருக்கு ஆவியாகத் தோன்றுகிறார்.

அருகில் வந்த பிறகே உண்மை தெரிகிறது.

நமது கண்களின் பார்வைச் சக்திக்கு ஓர் எல்லை உண்டு. அதற்குத் தகுந்த அளவிலேயே நாம் பார்க்கும் பொருளைக் கிரகித்து அறிய முடியும்.

தூரத்தே உள்ளவை மங்கலாகத் தெரிகின்றன. அருகில் உள்ளவை தெளிவாகத் தெரிகின்றன.

நிறமற்ற வானமும் கடலும் தூரத்திலிருந்து பார்த்தால் நீல நிறத்துடன் தோன்றுகின்றன. கடல் நீரைக் கையில் எடுத்துப் பார்த்தால் நிறம் தெரிவதில்லை.

சிலர் சில நிறங்களைப் பார்க்க முடியாத தன்மையைப் பெற்றிருக்கின்றனர். சில நிறங்களை அவர்களால் பார்க்க முடியாது.

ஒவ்வொருவரும் நமது கண்களின் பார்வைத் திறனுக்கு உட்பட்டவைகளை மட்டுமே பார்க்கிறோம்.

ஒரு பொருளைத் தூரத்திலிருந்து பார்க்கும்போது நீலமாகவோ அல்லது கருப்பாகவோ தெரியலாம். அதனை அருகில் வைத்துப் பார்க்கும்போது சிவப்பாகவோ அல்லது பச்சையாகவோ தெரியலாம். அந்தப் பொருளை மைக்ராஸ்கோப்பின் மூலம் பார்க்கும்போது அதன் நிறம் இன்னும் வேறு விதமாகத் தெரியலாம்.

நமது விழித்திரையானது, ஒளி அலைகளின் சில அலைவரிசைகளை மாத்திரமே கிரகிக்கும் தன்மை உடையவை. அந்த அலைவரிசையைத் தவிர வேறு அலைவரிசையில் உள்ள ஒளி அமைப்புகளையும் உருவங்களையும் நிறங்களையும் கிரகிக்க முடியாது.

நாம் திறந்த வெளியில் நடந்து செல்கிறோம். தூரத்தே வரும் இரயிலின் ஓசை, ஓர் இசையைப்போல் கேட்கிறது. சில நிமிடங்களில் அந்த இரயில் நம்மை நெருங்கி வந்து நம்மைக் கடந்து செல்லும்போது, அதிரவைக்கும் பேரிரைச்சல் ஏற்படுகிறது.

ஒலி அமைப்பு இவ்வாறுதான் செயல்படுகிறது. தூரத்தே கேட்கையில் இசையைப் போன்று தோன்றிய ஓசை அருகில் வர, பேரிரைச்சலாக மாறிவிடுகிறது.

காது கேட்கும் தன்மையில் பாதிப்படைந்த ஒருவர் வீட்டில் படுத்திருந்தார். யாரோ கதவைத் தட்டுவதுபோல் கேட்டது. ‘தனக்குக் காது கேட்க ஆரம்பித்து விட்டது. கதவைத் தட்டுவதைக்கூட அறிந்து கொள்ள முடிகிறது’ என்ற சந்தோஷம் அவருக்கு ஏற்பட்டது. கதவைத் திறந்து யார் என்று கேட்டார். அங்கே எவருமே இல்லை. பிறகுதான் தெரிந்தது. வீட்டின் முன்பு இடி விழுந்து, வீட்டின் முன்னே கட்டப்பட்டிருந்த பசுவும் கன்றும் இறந்துவிட்டன என்று. இடியோசை அவருக்குக் கதவைத் தட்டியதுபோல் கேட்டுள்ளது.

நமது செவிப்பறையின் தன்மைக்கேற்பதான் நம்மால் ஒலியைக் கிரகிக்க முடியும். ஒலி அலைகளில் கூட சில அலைவரிசைகளை மட்டுமே நமது செவிப்பறையால் கிரகிக்க முடியும். அதனிலும் உயர்ந்த மற்றும் தாழ்ந்த அலைவரிசைகளில் உள்ள ஒலி அலைகளை நம்மால் கிரகிக்க முடியாது.

இவ்வாறே நமது மற்றைய புலன் உணர்வுகளான சுவையுணர்வு, தொடு உணர்வு,, வாசனை உணர்வு ஆகியனவும் செயல்படுகின்றன.

நமது ஒவ்வொரு புலன் உணர்வும் ஒரு குறிப்பிட்ட அலைவரிசையில் இயங்குகின்றது. அந்த குறிப்பிட்ட அலைவரிசைக்குட்பட்ட இயக்கங்களை மாத்திரமே கிரகித்து அறியும் சக்தி அவற்றுக்கு உண்டு. அந்த எல்லையைக் கடந்து அவற்றால் அறிய முடியாது. அந்த எல்லைக்குள் எவையெல்லாம் அடங்குகின்றனவோ அவற்றை மட்டுமே கிரகித்து அறிய முடிகிறது. நாம் கிரகித்து அறிந்த அளவிலேயே எதையும் நாம் புரிந்துகொள்கிறோம்.

நாம் காணும் பொருளும் நாம் கேட்கும் ஒலியும் நமது புலன்களின் கிரகிப்புத்தன்மையில் ஒரு சலனத்தை ஏற்படுத்துகிறது. அந்த சலனத்தின் மூலமே நாம் கிரகிக்கிறோம். நாம் பார்க்கும் பொருள் நமது விழித்திரையில் ஓர் ஒலிச் சலனத்தை ஏற்படுத்துகிறது. நாம் கேட்கும் ஒலி, நமது செவிப்பறையில் ஓர் ஒலிச் சலனத்தை ஏற்படுத்துகிறது. இவ்வாறு நமது

ஒவ்வொரு புலனிலும் ஒவ்வொரு வகை சலனம் ஏற்படுகிறது. இந்தச் சலனத்தை ஆதாரமாகக் கொண்டே, நாம் அந்தச் சலனத்துக்குக் காரணமான உலகப் பொருளை அறிகிறோம்.

ஒரு குயில் இசை பாடுகிறது. அதன் உருவம் நமது விழித்திரையில் ஏற்படுத்தும் சலனத்தைக் கொண்டு அந்தக் குயிலின் உருவத்தைப் பார்க்கிறோம். அதன் ஒலி நமது செவிப்பறையில் ஏற்படுத்தும் ஒலிச்சலனத்தைக் கொண்டு குயிலின் இசையை அறிகிறோம். குயில்வேறு; குயில் நமது புலன்களில் ஏற்படுத்தும் சலனம் வேறு அல்ல, நாம் குயிலை அறியவில்லை. குயில் நமது புலன்களில் ஏற்படுத்தும் சலனத்தை மட்டுமே அறிகிறோம். **நமது புலன்களில் சலனத்தை ஏற்படுத்தாத எந்தப் பொருளையும் நாம் அறிவது இல்லை.**

**உண்மையில் நாம் காண்பது பொருளல்ல -**
**புலன் உணர்வை மட்டுமே.**
**நாம் கேட்பது ஒலியல்ல -**
**புலன் உணர்வை மட்டுமே.**
**நாம் முகர்வது வாசனையல்ல -**
**புலன் உணர்வை மட்டுமே.**

**அந்தப் புலன் உணர்வுக்கு ஆதாரமாக - அந்தப் புலன் உணர்வைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாக - புறப்பொருள்கள் இருக்கலாம். ஆனால் புறப்பொருளை நாம் அறிவதில்லை. அவை ஏற்படுத்தும் சலனத்தை மட்டுமே அறிகிறோம்.**

நமது செவிப்பறையின் சிறிய பரப்புக்குள்ளே, நாம் ஒலி வடிவில் காணும் உலகம் முழுவதும் அடங்கிவிடுகிறது. நமது விழித்திரையின் சிறிய பரப்புக்குள்ளேயே, நாம் ஒளி வடிவில் காணும் உலகம் முழுவதும் அடங்கிவிடுகிறது. இவ்வாறே நாம் அனுபவிக்கும் அனைத்து சீதோஷ்ண நிலைகளும் நமது உடலின் தோற்பரப்புக்குள்ளேயே அடங்கிவிடுகின்றன.

இந்த உலகத்தை நாம் அறியவில்லை. இந்த உலகம் நமது புலன் உணர்வில் என்ன சலனங்களை ஏற்படுத்துகின்றதோ அவற்றையே நாம் அறிகிறோம். நமது புலன்களில் ஏது பழுதுபட்டாலும் அது சம்பந்தமான உலகம் நமக்கில்லை. பார்வை அற்றவருக்கு பார்க்கப்படும் உலகம் இல்லை. காது கேளாதவருக்கு ஒலி உலகம் இல்லை.

**நாம் பார்ப்பது உலகத்தை அல்ல; நாம் பார்ப்பது நமது புலன் உணர்வையே. நாம் அனுபவிப்பது உலகத்தை அல்ல; நமது புலன் உணர்வையே.**

உலகத்தைப் பார்க்கிறோம் என்ற எண்ணத்துடன் நம்மை நாமே பார்த்துக்கொள்கிறோம். உலகத்தை அனுபவிக்கும் எண்ணத்துடன் நம்மை நாமே - நமது உணர்வுகளையே - அனுபவித்துக்கொள்கிறோம்.

உலக இயக்கம் வேறு; நமது உடல் இயக்கம் வேறு அன்று. நமது உடல் இயக்கமே உலக இயக்கம்; உலக இயக்கமே உடல் இயக்கம்; நாம் காணும் உலகம், நமது உடலாகவே இருக்கிறது.

நாமே நமது உலகம்; நாம் வேறு நம் உலகம் வேறு அன்று. நமக்கு அந்நியமான எந்த உலகமும் கிடையாது. நமக்குள் அடங்காத உலகம், நம்மைப் பொறுத்தவரையிலும் கிடையவே கிடையாது.

உங்களைப் பொறுத்த அளவில், நான் உங்கள் புலன் உணர்வின் பகுதியாகவே உங்களுக்குள் அடங்கிவிடுகிறேன்.

என்னைப் பொறுத்த அளவில் நீங்கள் எனது புலன் உணர்வின் ஒரு பகுதியாகவே எனக்குள் அடங்கிவிடுகிறீர்கள்.

உங்களைப் பொறுத்த அளவில் நீங்களே எல்லாமாக இருக்கிறீர்கள்.

என்னைப் பொறுத்த அளவில் நானே எல்லாமாக இருக்கிறேன்.



# 3. இந்த உலகம் நீங்களே

முந்தைய அத்தியாயத்தில், பூங்காவில் உள்ள மூன்று நபர்களைப் பற்றிய உதாரணத்தைப் பார்த்தோம். முதலாவது நபர் பூங்காவில் அமர்ந்திருக்கிறார். அவரை நோக்கி வரும் இரண்டாவது நபர் நண்பரைப் போல தோற்றமளிக்கின்றார். அதே இரண்டாவது நபர், தூரத்தே வரும் மூன்றாம் நபரின் கண்களுக்கு ஓர் ஆவியைப் போன்று தோற்றமளிக்கிறார். ஒரே நபரை இரண்டு பேர் பார்க்கிறார்கள். முதலாவது நபருக்கு நண்பராகத் தோற்றமளிக்கும் அவர், மூன்றாவது நபருக்கு ஆவியாகத் தோற்றமளிக்கிறார். பார்க்கப்படும் நபர் ஒருவர். ஆனால், முதலாவது நபர் பார்க்கும் காட்சி வேறு; மூன்றாவது நபர் பார்க்கும் காட்சி வேறு.

காணப்படும் பொருள் ஒன்று. ஆனால் கொண்ட கருத்துதான் வேறு. உண்மையில், அந்த இரண்டாவது நபர், முதலாவது நபர் நினைத்ததைப் போல் அவரது நண்பரும் இல்லை; மூன்றாவது நபர் நினைத்ததைப்போல் ஆவியும் இல்லை. அவர் வேறு யாரோ ஒருவர். ஆனால், முதலாவது நபரைப் பொறுத்த அளவில் அவர் அவரது நண்பர். மூன்றாவது நபரைப் பொறுத்த அளவில் அவர் ஓர் ஆவி.

இந்த அனுபவம் அவர்களுக்கு எப்படி ஏற்பட்டது?

முதலாவது நபர் தனது தனிப்பட்ட கருத்தை அந்த உருவத்தின் மீது சுமத்துகிறார். அவரது கருத்துக்கு ஏற்றபடி அந்த நபர், அவரது நண்பராகத் தோன்றுகிறார்.

அந்த நபரின் மீது, மூன்றாவது நபர் தனது தனிப்பட்ட கருத்தைச் சுமத்தும்போது, அந்த நபர் ஆவியோல் தோன்றுகிறார்.

உண்மை வேறு; அனுபவம் வேறு.

உண்மையான உண்மை எப்படி இருந்தாலும் சரி,

நம்மைப் பொறுத்தவரையில் நாம் எதை எப்படி அனுபவிக்கின்றோமோ அதுதான் உண்மை.

ஒரு நபரை அல்லது ஒரு பொருளை, நாம் எந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கின்றோமோ அதற்கேற்ற வகையில் அந்தப் பொருள் நமக்குத் தோன்றுகிறது; அந்த நபர் நமக்குத் தோற்றமளிக்கிறார்.

நாம் எப்படிப் பார்க்கிறோமோ அதுதான் நமக்கு உண்மை; நாம் எப்படி ஏற்றுக்கொள்கிறோமோ அதுதான் நமக்கு உண்மை.

நாம் காண்பனவற்றின் மீதும் கேட்பனவற்றின் மீதும் அனுபவிப்பனவற்றின் மீதும் எந்தக் கருத்தை ஏற்றிப் பார்க்கின்றோமோ அப்படியே அவை நமக்குத் தோற்றமளிக்கின்றன.

நாம் எதைப்பார்த்தாலும் நமது கருத்தோடுதான் பார்க்கிறோம். நமது எண்ணங்களைக் கொண்டுதான் பார்க்கிறோம்.

நமது கருத்துகள் சில வேளைகளில் நடைமுறை உண்மைக்கு ஏற்றதாக இருக்கலாம். சில வேளைகளில் நடைமுறை உண்மையோடு தொடர்பு இல்லாததாகக்கூட இருக்கலாம். ஆனால் அது நமக்கு முக்கியம் இல்லை.

எதைப் பார்த்தாலும் நமது கருத்துடனேதான் பார்க்கிறோம்.

நமக்குத் தெரியாதவரின் மீது எப்படி நமது கருத்துகளையும் கற்பனைகளையும் சுமத்திப் பார்த்தோமோ அதுபோலவே நமக்குத் தெரிந்தவற்றையும் நமது கருத்துகளோடுதான் பார்க்கிறோம்.

நான் எனது அம்மாவைப் பார்க்கும்போது அம்மா என்ற கருத்தோடு பார்க்கிறேன். எனது அப்பாவைப் பார்க்கும்போது அப்பா என்ற கருத்தோடு பார்க்கிறேன். என்னுடைய உறவினரைப் பார்க்கும்போது அவரைப் பற்றிய கருத்துடன் பார்க்கிறேன்.

நமது வாழ்வின் அனுபவங்கள் எல்லாம், நாம் சேகரித்த செய்திகள் எல்லாம், நமது மனதினுள் நினைவுக் குறிப்புகளாகப் படிந்து கிடக்கின்றன. அவற்றிலிருந்து வெளியாகும் நினைவைக் கொண்டே ஒவ்வொரு பொருளையும் பார்க்கிறோம். அவற்றிலிருந்து வெளியாகும் கருத்துகளைக் கொண்டே ஒவ்வொரு நபரையும் பார்க்கிறோம்.

ஒவ்வொரு பொருளையும் ஒவ்வொரு நபரையும் சிந்தனை கலந்தே பார்க்கிறோம். நம் கருத்தின் அடிப்படையிலேயே பார்க்கிறோம். அவ்வாறு பார்க்காவிடில் அந்தப் பொருள் என்னவென்றே நம்மால் புரிந்துகொள்ள முடியாது.

எனது அம்மாவைப் பற்றிய செய்திகளோ கருத்துகளோ இல்லாமல், எனது அம்மாவைப் பார்த்து, அம்மா என்று புரிந்துகொள்ள முடியாது. எந்தக் கருத்தும் இல்லாமல் எனது அப்பாவைப் பார்த்து, எனது அப்பா என்று புரிந்துகொள்ள முடியாது.

நமது கருத்துகளின் உதவி இல்லாமலும் நமது எண்ணங்களின்

உதவி இல்லாமலும் நாம் எவரையும் பார்த்து, எதனையும் புரிந்துகொள்ள முடியாது.

கருத்தைக் கலந்து பார்ப்பதன் மூலமே நமது தாய், தாயாகிறார்; நமது நண்பர், நண்பராகிறார்; நமது கணவர் கணவராகிறார்; நமது மனைவி மனைவியாகிறார்.

நமது கருத்தைக் கலந்து பார்ப்பதன் மூலமே பறவை பறவையாகிறது; கடல் கடலாகிறது; மலை மலையாகிறது; மிருகங்கள் மிருகங்களாகின்றன; உலகம் உலகமாகிறது.

நாம் காணும் பொருளுக்கு நமது கண்கள் ஒளி வடிவம் கொடுக்கின்றன; உருவம் கொடுக்கின்றன. நமது செவிகள் ஒலி வடிவம் கொடுக்கின்றன. நமது புலன்கள் அனைத்தும், நாம் காணும் பொருளுக்கு ஒரு பௌதிக வடிவம் கொடுக்கின்றன.

அவ்வாறு நாம் நமது புலன்களின் வாயிலாகக் காணும் பௌதிக வடிவத்துக்கு நமது சிந்தனையின் மூலம் கருத்து வடிவம் ஒன்றை வழங்குகிறோம்.

நாம் காணும் உலகத்துக்கு நாம் நமது உடலை வழங்குகிறோம். நாம் கண்ட உலகத்துக்கு நமது உள்ளத்தையும் வழங்குகிறோம்.

நமது உடல் உணர்வுகள் மூலம் உலகப் பொருள்களுக்கு பௌதிக வடிவம் தரப்படுகிறது. நமது உள்ளத்து சிந்தனை மூலம் அவற்றுக்கு கருத்து வடிவம் தரப்படுகிறது.

நாம் வேறு நமது உடல் வேறு அன்று. நாம் வேறு நமது உடல் உணர்வுகள் வேறு அல்ல. நம் உணர்வுகள் வேறு உணர்வுகளாகத் தோன்றும் உலகம் வேறு அன்று.

நாம் வேறு நமது அனுபவங்கள் வேறு அல்ல. நமது அனுபவம் வேறு அதிலிருந்து வரும் நினைவுகள் வேறு அல்ல. நமது நினைவுகள் வேறு நாம் அவற்றின் மூலம் மற்றவர்களுக்கு அளிக்கும் கருத்து உருவம் வேறு அன்று.

நாமே நமது அனுபவம்; நாமே நமது நினைவுகள்; நாமே நாம் கருதும் உலகம்.

நாம் காணும் உலகம் நமது உணர்வாலும், உள்ளத்தாலும் உருவாக்கப்பட்டது.

நமது உடலாலும் உள்ளத்தாலும் அமைந்தவையே நாம் காணும் பொருட்கள், மனிதர்கள்.

நமது நண்பன், நமது உடலின் அம்சம்; நமது உள்ளத்தின் அம்சம்.

நாமே நமது நண்பன்; நாமே நமது எதிரி; நாமே நமது தாய்; நாமே நமது தந்தை; நாமே நமது மனைவி; நாமே நமது கணவன்; நாமே நமது குழந்தை; நாமே நமது உலகம்.

நாம் வேறு; நமது உலகம் வேறு அன்று.

நாமே நாம் காணும் உலகம்; நாம் அனுபவிக்கும் உலகம்.

உலகம் அனைத்தும் நமக்குள்ளேயே நிலை பெற்றுள்ளன. நாம் அசையாமல் உலகத்தில் அசைவில்லை. நமது அசைவே உலகத்தின் அசைவு.

நமது அம்சத்துக்கு அந்நியமாக எந்த ஒரு பொருளும் இல்லை. நமக்குள் அடங்காத எந்தவொரு பொருளும் மனிதரும் இவ்வுலகில் இல்லை.

நானாக இருப்பதும் நானே; எனக்கு வெளியில் இருப்பதும் நானே. உள்ளும் புறமும் நானே.

அனைத்தும் நாமே; அனைத்தும் நீங்களே.

நம்முடைய விரிவே உலகம்.

இந்த உலகின் மையப்புள்ளி நாமே.

நம்மை ஆதாரமாகக் கொண்டே இந்த உலகம் சுழலுகின்றது.



# 4. நான் என்பது யார்?

ஒவ்வொருவரும் தன்னை 'நான்' என்று கருதுகின்றனர். 'நான்' என்னும் தன்மை ஒவ்வொருவருக்கும் உள்ளது. இந்த 'நான்' என்பது என்ன?

நமது அறிவு ஒவ்வொருவருக்கும் ஒரு பெயரிடுகிறது. தாய் என்றும், தந்தை என்றும், நண்பன் என்றும், மனிதன் - மிருகம் என்றும், கடல் - மலை என்றும் நமது அறிவு அனைவருக்கும் அனைத்துக்கும் ஒரு பெயரைக் கொடுக்கிறது.

அவ்வாறு பெயரிடுவதன் மூலமே ஒன்றையொன்று பிரித்துப் பார்த்தும் ஒப்பிட்டுப் பார்த்தும் புரிந்துகொள்கிறது. ஒவ்வொன்றையும் தான் புரிந்துகொள்ளும் வசதிக்காக நமது அறிவு ஒவ்வொன்றுக்கும் ஒரு பெயர் கொடுத்துள்ளது.

இப்படி ஒவ்வொருவருக்கும் பெயர் கொடுக்கும் அறிவு, தனக்கும் ஒரு பெயரைக் கொடுத்துக் கொள்கிறது.

தன்னை அது 'நான்' என்று குறிப்பிடுகிறது.

நாம் ஒவ்வொரு பொருளைப் பார்க்கும் போதும் ஒவ்வொரு நபரைப் பார்க்கும் போதும் சிந்தனை என்னும் வர்ணம் பூசியே பார்க்கிறோம். ஒருவரைத் தாய் என்று பார்க்கிறோம். ஒருவரை நண்பன் என்று பாக்கிறோம். ஒரு மலரை மலர் என்று பார்க்கிறோம். மரத்தினை, மரம் என்று பார்க்கிறோம்.

இப்படி நாம் அடுத்தவரையும் மற்ற பொருட்களையும் வர்ணம் பூசி பார்ப்பதோடு நின்றுவிடுவதில்லை. நமக்கு நாமே வர்ணம் பூசித்தான் பார்க்கிறோம்.

ஆனால் ஒரு வித்தியாசம்.

மற்றவர்களுக்கு நேர்முகமாக நாம் வர்ணம் பூசினோமென்றால், நமக்கு மறைமுகமாக வர்ணம் பூசுகிறோம்.

அதென்ன மறைமுகம்?

பள்ளிக்கூடத்தில் மாணவர்களுக்குத் தேர்வில் மதிப்பெண்கள் போடுவதைப் பார்த்திருப்பீர்கள். கணக்கில் 90 மதிப்பெண்; அறிவியலில்

80 மதிப்பெண். அப்படி யென்றால் என்ன அர்த்தம்?

அதாவது,

90 என்பது, 100க்கு 90 என்றும்

80 என்பது, 100க்கு 80 என்றும் அர்த்தம்.

90, 80 என்று வெளிப்படையாகக் கூறப்பட்டாலும் அவை 100 என்னும் எண்ணை மறைமுகப் பகுதியாகக் கொண்டுள்ளன.

இது போலவே நாம் நமக்கு வர்ணம் பூசிக்கொள்கிறோம்.

ஒருவரை, நாம் நமது தாய் அல்லது தந்தையாகப் பார்க்கும் பொழுது,

நம்மை அறியாமலேயே நம்மை அவருடைய மகனாகவோ அல்லது மகளாகவோ பார்த்துக்கொள்கிறோம்.

ஒருவரை நமது மனைவியாகப் பார்க்கும் அதே நேரத்தில் நம்மை கணவனாகப் பார்த்துக்கொள்கிறோம்.

இப்படி ஓர் –

எதிரிடைத் தோற்றம் நமக்குள்ளே ஏற்படுகிறது.

இவ்வாறுதான் பெரும்பாலும் நம்மை நாம் அறிந்துள்ளோம்.

'நான்' என்று தனிமைப்படுத்திப் பார்க்கக் கூடிய வகையில் நமக்குள் எதுவுமே கிடையாது. ஏதாவது ஒன்றின் நிழலாகவே இந்த 'நான்' அமைந்திருக்கிறது.

நம்மை நமது குடும்பத்தோடு இணைத்துப் பார்க்கும் போது, நாம் இந்தக் குடும்பத்தில் ஒருவன் என்ற தனித்த உணர்வு ஏற்படுகிறது.

நம்மை ஒரு மதத்தினரோடோ அல்லது இனத்தாரோடோ இணைத்துப் பார்க்கும்போதும் இவ்வாறே ஓர் உணர்வு ஏற்படுகிறது.

இது போலவே நம்மை நாம் மதச் சிந்தனைகளோடும் உணர்வுகளோடும் இணைத்துப் பார்த்து நம்மை 'நான்' என்று அடையாளப்படுத்திக் கொள்கிறோம்.

நம்மை, 'சிந்திப்பவன்' என்றும் 'உணர்பவன்' என்றும் கூறிக் கொள்கிறோம்.

உண்மையில் சிந்திப்பவன் என்றோ உணர்பவன் என்றோ எந்த நானும் கிடையாது.

ஆனால், அப்படி ஒரு நிழல் தோன்றுகிறது.

இப்படி நினைவுகளையோ அல்லது உணர்வுகளையோ ஆதாரமாகக் கொண்டுதான் நான் என்னும் இந்த நிழல் தோன்றுகிறது.

ஆனால் அது நமக்குத் தலை கீழாகத் தோன்றுகின்றது. அதாவது...

நம்மை ஆதாரமாக் கொண்டே நினைவுகள் அமைந்திருப்பது போலவும்.

நம்மை ஆதாரமாகக் கொண்டே உணர்வுகள் அமைந்திருப்பது போலவும் தோன்றுகிறது.

'நான்' என்பது ஒரு நிரந்தர அமைப்பு போலவும் நினைவுகளும் உணர்வுகளும் அதன் மீது வந்து வந்து போவது போலவும் நமக்குத் தோன்றுகின்றது.

இது எப்படி உள்ளதெனில்...

மரத்தின் நிழலானது, தானே மரத்தைச் சுமந்து கொண்டிருப்பதாக நினைப்பதைப் போன்று உள்ளது.

ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு உணர்வும் ஒவ்வொரு அனுபவமும் தனது நிழலாக 'நான்' எனும் நிழலையும் தோற்றுவித்துக்கொண்டே இருக்கின்றது.

உண்மையில் எண்ணம் மட்டுமே இருக்கிறது; எண்ணுபவன் எனும் நான் அங்கு கிடையாது.

உணர்வு மட்டுமே இருக்கிறது; அனுபவிப்பவன் எனும் நான் அங்கு கிடையாது.

சிந்தனை இருப்பது உண்மை; ஆனால் நான் உணரவில்லை. அனுபவம் இருப்பது உண்மை; ஆனால் நான் அனுபவிக்கவில்லை.

ஆனால்,

நான் சிந்திப்பது போலத் தோன்றுகிறது;

நான் உணர்வது போலத் தோன்றுகிறது;

நான் அனுபவிப்பது போலத் தோன்றுகிது.

அப்படியானால்...

சிந்தனைகளுக்கு ஆதாரமாக நான் என்று எதுவுமே கிடையாதா?

உணர்வுகளுக்கு ஆதாரமாக அனுபவிப்பவனாகிய நான் என்று எவருமே கிடையாதா?

அனுபவங்களுக்கு ஆதாரமாக அனுபவிப்பவனாகிய நான் என்று எவருமே கிடையாதா?

கிடையாது;

நிச்சயமாகக் கிடையாது.

ஆனால்...

நான் என்று ஒருவர் நமக்குள் நிரந்தரமாக இருப்பதைப் போலவும் அவரே எல்லாச் சிந்தனைகளையும் சிந்தித்துக் கொண்டிருப்பது போலவும் அவரே எல்லா உணர்வுகளையும் உணர்ந்து கொண்டிருப்பதைப் போலவும் அவரே எல்லாவித அனுபவங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பது போலவும் நமக்கு அனுபவபூர்வமாகத் தோற்றமளிக்கிறது.

நான் என்பது ஒரு கற்பனையாக எப்படி இருக்க முடியும்?

நான் என்பது ஒரு நிழலாக எப்படி இருக்க முடியும்?

இதனைத் தீர்வு காண்பதற்கு, காலம் என்றால் என்ன என்பதையும் சற்றுத் தெரிந்துகொண்டாக வேண்டும்.



# 5. கடந்தகாலம் - நிகழ்காலம் - எதிர்காலம்

**கா**லம், நேரம் என்று குறிப்பிடுகிறோம். எதனை அவ்வாறு குறிப்பிடுகிறோம்? நேற்று நடந்தவைகளை எல்லாம் கடந்தகாலம் என்றும் இன்று நடப்பவைகளை நிகழ்காலம் என்றும் நாளை நடப்பவற்றை எதிர்காலம் என்றும் குறிப்பிடுகிறோம்.

நேற்று என்பது எது?

நடந்து முடிந்தவை எல்லாம் நேற்று என்பதற்குள் அடங்குகின்றன. அவையெல்லாம் அனுபவித்து முடிக்கப்பட்டவை. அவற்றையெல்லாம் நாம் கடந்து வந்துவிட்டோம். கடந்து போனவை எல்லாம் கடந்த காலம். கடந்தகாலம் என்பது இப்போது கிடையாது. அதை இப்போது அனுபவிக்க முடியாது. அது முடிந்துபோன ஒன்று. அது இல்லாத ஒன்று. ஒரு காலத்தில் இருந்தது. இனி எக்காலத்திலும் வரமுடியாதது. அதுதான் கடந்தகாலம். அதை நாம் அனுபவிக்கவே முடியாது. ஆனால் -

அதை நினைத்துப் பார்க்க முடியும்.

நேற்று நடந்தவை, நேற்று அனுபவித்தவை, கடந்த காலத்தில் இருந்தவை அனைத்தும் நமது நினைவுக் கூட்டங்களாக இருக்கின்றன.

எனவே நடந்து போனவைகளையும் கடந்து போனவைகளையும் நினைத்துப் பார்த்துக்கொள்ளலாம். மற்றபடி நேரடியாக அனுபவிக்க முடியாது. நாம் எதை அனுபவிக்கின்றோமோ அது நிகழ்காலம். நிகழ்காலத்தை அனுபவித்து அறிகிறோம். கடந்தகாலத்தை நினைவினால் - சிந்தனையால் அறிகிறோம்.

எதிர்காலத்தை எவ்வாறு அறிகிறோம்?

எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று; ஏற்படாத ஒன்று. அது நிகழ்ந்தாலும் நிகழலாம்; நிகழாமலே இருந்தாலும் இருந்துவிடலாம். எதிர்காலத்தை நமது அனுமானத்தின் மூலமே அறியமுடியும். நமது அனுமானமே நமது எதிர்காலம். நாளை சூரியன் உதிக்கும் என்பது நமது அனுமானம்; நமது கணிப்பு. நாளை நாம் பயணம் செய்யவேண்டும்; பல செயல்களைச் செய்ய வேண்டும் என்பது நமது அனுமானத்தை அடிப்படையாகக் கொண்ட செயல் திட்டம். நமது எதிர்பார்ப்பு.

அனுமானம் என்பதும் நமது சிந்தனையின் வடிவுதான். நமது சிந்தனைகள் யாவும் நமது நினைவுக் குறிப்புகளிலிருந்தே தோன்றுகின்றன. நமது நினைவுக் குவியல்கள் எல்லாம் நமது அனுபவங்களின் தொகுப்பு மாத்திரமே. நமது நினைவுகள் அனைத்தும் நமது கடந்தகால அனுபவத் தொகுப்பிலிருந்தே தோன்றுகின்றன.

சிந்தனைகள் அனைத்தும் கடந்தகாலத்தைச் சார்ந்தவையே. எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனையாகத் தோன்றலாம். ஆனால் அது வெறும் தோற்றமே. எதிர்காலத்தைக் காட்டுவதைப் போல் தோன்றலாம். ஆனால் அது கடந்தகாலமே, கடந்தகாலத்தை மட்டுமே நமது சிந்தனையால் அறிய முடியும், கடந்தகாலமே எதிர்காலத்தை பிரதிபலித்துக் காட்டுகிறது. ஆக, நாம் நினைவுகளோடு வாழும் வரை...

எதிர்காலத்தை எட்டிப் பார்ப்பதைப்போல் தோன்றினாலும் நாம் கடந்தகாலத்திலேயே வாழ்ந்து வருகிறோம்.

சரி, நிகழ்காலத்தை எடுத்துக்கொள்வோம். அது, இப்போது, இந்தக் கணத்தில் நிகழ்வதைக் குறிக்கிறது.

– இந்தக் கணம் என்பது எதனைக் குறிக்கின்றது?

மாலை நேரத்தில் நாம் நடந்து செல்லுகிறோம். மாலைத் தென்றல் நமது உடலை வருடிச் செல்கிறது. மாலையில் சூரியன் மறையத் துவங்குகிறான். சில பறவைகள் இனிமையாகச் சத்தமிடுகின்றன. இவை அனைத்தும் நமக்கு முன்னே நிகழ்கின்றன. இவற்றை நாம் உணர்கிறோம். நேருக்கு நேர் உணர்கிறோம். அனுபவித்து உணர்கிறோம். இவை நிகழ்வதற்கு நமது சிந்தனைகளோ நமது நினைவுகளோ தேவையில்லை. நாம் நினைத்தாலும் நினைக்காவிட்டாலும் நமது கண்முன்னே இவை நிகழ்கின்றன. நேரிடையாக நாம் அனுபவிக்கக் கூடிய வகையில் அவை நமக்கு முன்னால் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் கடந்தகாலமும் எதிர்காலமும் அப்படி இல்லை. நாம் நினைத்துப் பார்த்தால்தான் கடந்தகாலமும் உண்டு; எதிர்காலமும் உண்டு. நினைவு இல்லாமல் கடந்தகாலமும் கிடையாது; எதிர்காலமும் கிடையாது.

நிகழ்காலத்துக்கு அது தேவையில்லை; சிந்தனையின் உதவி தேவையில்லை. சிந்தனையின் உதவி எதுவும் இல்லாமல் எவற்றையெல்லாம் நாம் நிதர்சனமாக உணர்கிறோமோ அவையெல்லாம் நிகழ்காலம். நிகழ்காலம் என்பது கடந்தகாலத்திலிருந்து வந்ததல்ல. எதிர்காலத்தை நோக்கியும் செல்வதல்ல. அது நிகழ்காலத்திலிருந்தே வந்து நிகழ்காலத்தை நோக்கியே செல்கிறது. நிகழ்காலத்தைப் பொறுத்த

அளவில் நிகழ்காலம் மட்டுமே உண்மையானது. அதற்கும் கடந்த காலத்துக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது.

நிகழ்காலத்தை நாம் உணர்ந்து அறிகிறோம். கடந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் நினைவுகள் மூலமே அறிகிறோம். நினைவுகள் அனைத்தும் கற்பனையின் அம்சமே. நமது கற்பனையை ஆதாரமாக் கொண்டே கடந்தகாலமும் எதிர்காலமும் ஏற்படுகின்றன.

அதாவது...

நமது புலன் நுகர்ச்சியின் மூலம் நிகழ்காலத்தை நுகர்ந்து, உணர்ந்து அறிகிறோம்.

ஆனால் புலன்களால் இக் கணத்தில் கடந்தகாலத்தையோ எதிர்காலத்தையோ நுகர்ந்து அறிதல் முடியாது. ஏனென்றால் அவை இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை.

நமக்கு நேரிடையாக எதிர்ப்படுவதை மட்டுமே நாம் நுகர்ந்து அறிகிறோம். கடந்தகாலமும் எதிர்காலமும் நமக்கு நேரிடையாக எதிர்ப்படுவதில்லை. அவற்றை நாம் எதிரிட்டு நுகர்ந்தறிய முடியாது.

ஆக,

நிகழ்காலத்தை மட்டும் - நிகழ்வதை மட்டும் - நுகர்ந்து அறிகிறோம்.

நுகர்ச்சி மட்டும் போதுமா?

இனிப்பைச் சுவைத்து உணர்கிறோம். நாம் சுவைப்பது இனிப்பு என்பதை எப்படித் தெரிந்து கொள்கிறோம்? அந்த இனிப்பு எத்தன்மையது என்பதை எவ்வாறு அறிகிறோம்? அது பழத்தின் இனிப்பா, அல்லது பட்சணங்களின் இனிப்பா என்பதை எப்படித் தெரிந்துகொள்கிறோம்?

நமது நினைவுகளின் உதவியைக் கொண்டுதானே அறிகிறோம்? நமது அனுபவங்களின் துணைகொண்டு நினைத்துப் பார்த்துத்தானே அதனைத் தெரிந்துகொள்கிறோம்?

ஆக,

புலன்களைக்கொண்டு உணர்ந்தாலும் நினைவுகளைக் கொண்டுதான் புரிந்துகொள்கிறோம்.

ஆகவே,

உணர்ந்துகொள்வது என்பது நிகழ்காலம்.

நுகர்வது, உணர்வது என்பது நிகழ்காலம்.

ஆனால்,

அதனைப் புரிந்து கொள்தல் என்பது கடந்தகாலம்.

நினைவுகளால் ஆக்கப்பட்டவை அனைத்துமே கடந்தகாலம். கடந்தகாலத்தின் உதவி இல்லாமல் நினைவுகள் எதுவுமில்லை. நினைவுகள் எதுவுமில்லாமல் புரிந்துகொள்தல் என்பது எதுவுமில்லை.

ஆக...

நாம் அனுபவிப்பது அசல் நிகழ்காலமா என்பது கேள்விக்குறியாக அமைந்துள்ளது.

நிகழ்காலம் என்று நாம் அனுபவிப்பதில் உணர்வும் உள்ளது; கற்பனையும் உள்ளது. பாதி உண்மையாக உள்ளது; பாதி கற்பனையாக - பொய்யாக உள்ளது. பாதி நனவாக உள்ளது; பாதி கனவாக உள்ளது.

நமது கனவுகள் யாவும் நிகழ்காலத்தைத் தழுவிக்கிடந்தாலும், அது கடந்தகாலத்தின் தாக்கமே. கடந்தகாலத்தின் தாக்கம் இல்லாமல் நிகழ்காலத்தை நம்மால் அணுக முடியவில்லை. எனவே கனவு பாதி; நனவு பாதியாக வாழ்ந்து வருகிறோம். நனவில் உணரப்படுவன எல்லாம் கனவில்தான் அடையாளம் காணப்படுகின்றன. அடையாளம் காணக்கூடிய, புரிந்துகொள்தல் நிகழக்கூடிய அந்த கனவுப் பிரதேசம்தான் நமக்கு யதார்த்தமாக அமைந்துள்ளது. அதுதான் நமக்கு நிச்சயத்தன்மையுடையதாகவும் பாதுகாப்புத்தன்மையுடையதாகவும் தோன்றுகிறது. உணர மட்டுமே முடியும்; புரிந்து கொள்ளமுடியாது என்ற மனநிலை ஒரு வறட்டு நிலையாகவும் அறிவற்ற சூன்ய நிலையாகவும் நமக்குத் தோன்றுகிறது. வெறும் உணர்வு மட்டும் உள்ள நிலை ஐந்தறிவு மட்டுமே உள்ள கீழான படைப்பாகவே தோன்றுகிறது. புரிந்துகொள்ளும் தன்மையுடைய பகுதியே - அதாவது கனவுப் பிரதேசமே - நமக்கு நன்மைபயக்கக் கூடியதாகவும் பாதுகாப்பு வழங்கக் கூடியதாகவும் அறிவுக்குப் பொருத்தமானதாகவும் தோன்றுகிறது. எனவே, நாம் நமது கனவுப் பிரதேசத்தில் இருந்துகொண்டே நனவில் வாழ்கிறோம். நமது கண்களுக்குக் கடந்தகாலம் என்னும் திரையை நிரந்தரமாகக் கட்டித் தொங்கவிட்டுள்ளோம். அந்தத் திரையின் வாயிலாகத்தான் நாம் அனைத்தையும் பார்க்கிறோம்; அனைத்தையும் கேட்கிறோம்.

பார்த்தல் என்பது உணர்வு பூர்வமானது. நான் பார்க்கிறேன் என்பது கனவு கலந்தது. கேட்டல், சுவைத்தல் அனைத்துமே உணர்வு அம்சம் கொண்டவை. நான் கேட்கிறேன்; நான் சுவைக்கிறேன் என்பவை கனவு அம்சம் கலந்தவை.

நமது உணர்வு அம்சத்தில் நான், நீ என்ற பாகுபாடு கிடையாது. கனவு கலக்கும்போதுதான் நான், நீ என்பது தோன்றுகிறது.

நாம் கேள்விப்பட்ட ஒரு கதை.

அதாவது அரசன் ஒருவன் இருக்கிறான். அவன் தான் மாறாத இளமையோடு என்றென்றும் இருப்பதற்கான மருந்து ஒன்றைத் தேடுகிறான். கடைசியில் அத்தகைய மருத்துவர் ஒருவரைக் கண்டுபிடிக்கின்றான். அவர் என்றும் இளமையோடு இருப்பதற்கான மருந்தொன்றைக் கொடுக்கிறார். இந்த மருந்தைத் தினமும் ஒரு வேளை சாப்பிட்டு வந்தால் முதுமையே ஏற்படாது என்று கூறுகிறார். அரசன் மருந்தைப் பெற்றுக்கொண்டதும் மருத்துவர் நிபந்தனை ஒன்றை விதிக்கிறார். அந்த நிபந்தனை என்னவென்றால் மருந்தைச் சாப்பிடும்போது குரங்கைப்பற்றி நினைக்கக்கூடாது. அரசன் அதனை அலட்சியமாக எடுத்துக்கொண்டான். இதென்ன பெரிய விஷயம்? நான் என்ன எப்போதும் குரங்கைப்பற்றியா நினைத்துக்கொண்டிருக்கிறேன்?

ஆனால் மருந்து பாட்டிலைத் தொடும்போதெல்லாம் மருத்துவர் சொன்ன நிபந்தனை நின்னவுக்கு வருகிறது. சாப்பிட முடியவில்லை. மருத்துவரைக் கூப்பிட்டுக் கேட்கிறான். நீர் ஏன் குரங்கைப்பற்றிக் கூறினீர்? நீர் கூறியதால்தான் குரங்கின் நினைவே ஏற்படுகிறது. நீர் கூறாமல் இருந்திருந்தால் நான் அது பற்றிய நினைவே இல்லாமல் மருந்தைச் சாப்பிட்டிருப்பேனே?

மருத்துவர் அதற்குப் பதில் சொன்னார். அதைச் சொல்லிக் கொடுப்பதுதான் இந்த மருந்தோடு சேர்ந்த விதிமுறை. அதைச் சொல்லாமல் இந்த மருந்தைக் கொடுக்கக்கூடாது. அதைத் தெரிந்து கொள்ளாமல் இந்த மருந்தைச் சாப்பிட்டாலும் பலன் இருக்காது.

இந்தக் கதையானது ஆன்மீக பாடத்தின் மிக நுட்பமான பகுதியை மையமாகக் கொண்டது. குரங்கைப்பற்றி நினைக்கக்கூடாது என்ற விதிமுறையைத் தெரிந்த பிறகும் குரங்கை நினைக்காமல் மருந்தைச் சாப்பிடுவது சாத்தியமா? இந்தக் கேள்வியை எழுப்பும் நோக்கத்துடன் மட்டுமே இந்தக் கதை கூறப்பட்டுள்ளது.

**நினைவுகளின் குறுக்கீடு இல்லாமல் செயல்படுவது சாத்தியமே. அது ஆன்மீக அறிவின் மூலமே சாத்தியமாகிறது.**

கனவு கலக்காமல் நனவில் வாழ்வது என்னும் கலைதான் இது. இது பற்றிய விபரங்களைப் பிரிதொரு பகுதியில் பார்க்கலாம்.



# 6. இடைவெளி என்பது எது?

இடைவெளி என்று குறிப்பிடுகிறோம். அது பற்றிப் பேசுகிறோம். இடைவெளி என்றால் என்ன?

இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலுள்ள தூரம் இடைவெளி.

பூமிக்கும் சந்திரனுக்கும் இடையிலுள்ள தூரம் இடைவெளி.

காலைக்கும் மாலைக்கும் இடையிலுள்ள நேரம் இடைவெளி. கடந்தகாலத்துக்கும் நிகழ்காலத்துக்கும் இடையிலுள்ளது இடைவெளி.

இந்த இடைவெளியில் என்ன இருக்கிறது?

அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் இடையில் எதுவுமே இல்லையா?

இரண்டுக்கும் இடையில் பல நாடுகளும் நகரங்களும் இருக்கின்றன. ஆனால் அவற்றை எல்லாம் தனித்தனியாக கவனத்துக்கு எடுத்துக்கொள்ளாமல் ஒட்டு மொத்தமாக எடுத்துக்கொண்டு அதனை இடைவெளி என்று பெயரிட்டு அழைக்கிறோம்.

ஆக,

நாம் இடைவெளி என்று அதனைக் குறிப்பிடுவதன் நோக்கம் அந்த இடைவெளியைப் புரிந்துகொள்வதற்காக அல்ல,

மாறாக, இரண்டு நாடுகளும் ஒன்றைவிட்டு ஒன்று எவ்வளவு தூரம் விலகி இருக்கின்றன என்பதைப் புரிந்துகொள்ளும் நோக்கமே. ஒரு கணக்கீட்டுக்காகவே இந்த இடைவெளிபற்றிக் குறிப்பிடுகிறோம்.

இது போன்றே காலைக்கும் மாலைக்கும் இடையிலும் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அவற்றையெல்லாம் நாம் தனித்தனியாக எடுத்துக்கொண்டு காலைக்கும் மாலைக்கும் இடையில் உள்ளதை காலம், நேரம் என்று கணக்கீடு செய்து கொள்கிறோம்.

கணக்கீடு செய்வதற்கான ஒரு அமைப்பே இடைவெளி எனப்படுகிறது. அந்த கணக்கீடு ஒரு கற்பனையான அமைப்பே; ஒரு உத்தேசக் குறியீடே.

இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலுள்ள.

இடைவெளியைப் பல ஆயிரம் மைல்கள் தூரமாகக் கணக்கீடு செய்கிறோம். இடையிலுள்ள பகுதிகள் யாவும் இந்தக் கணக்கீட்டிற்குள் வந்துவிடுகின்றன. இடையிலுள்ள நாடு நகரங்கள் அனைத்தும் மைல்கள் என்ற பெயரைப் பெற்றுவிடுகின்றன.

இதே போன்று காலை முதல் மாலை வரை நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தும் வெறும் இடைவெளியாகக் கணக்கிடப்படுகிறது. காலை முதல் மாலை வரை 12 மணி நேர இடைவெளி என்று நாம் கணக்கீடு செய்யும்போது இடைவெளியிலுள்ள நிகழ்ச்சிகள் யாவும் மணி, நேரம் என்று பெயர் மாற்றம் பெறுகின்றன.

ஓர் அளவீட்டுக்காக நாம் இந்தக் குறியீடுகளை ஏற்படுத்தியுள்ளோம். உண்மையில் மைல்கள் என்று எதுவும் கிடையாது. நேரம், மணி என்று எதுவும் கிடையாது.

இடைவெளி என்பது இரண்டு பொருட்களுக்கு இடையேயுள்ள இடைவெளியைக் குறிப்பிடுகிறது. இரண்டு நிகழ்ச்சிகளுக்கு இடையேயுள்ள இடைவெளியைக் குறிப்பிடுகிறது. இரண்டு இருந்தால்தான் அவற்றுக்கு இடையில் இடைவெளி என்ற ஒன்று இருக்க முடியும்.

ஆனால்...

உண்மையில் இரண்டு பொருட்கள் இருக்கின்றனவா?

இரண்டு நிகழ்ச்சிகள் இருக்கின்றனவா?

காலைக்கும் மாலைக்கும் இடையில் இடைவெளி இருக்கிறது. இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையில் இடைவெளி இருக்கிறது.

காலை மட்டும் இருக்கும்போது மாலை என்பது கற்பனையே.

சூரிய அஸ்தமனத்தின்போது சூரிய உதயம் என்பது கற்பனையே.

அனுபவித்துக் கொண்டிருப்பது உண்மையானது. நிகழ்ந்து கொண்டிருப்பது உண்மையானது.

ஆனால் நடந்து முடிந்தவையும் நடக்கப் போவதும் கற்பனையே.

கற்பனை வரும்போதுதான் இடைவெளி ஏற்படுகிறது.

அனுபவித்துக் கொண்டிருப்பது இடைவெளியை ஏற்படுத்துவதில்லை. அனுபவித்து முடித்ததைப் பற்றிய கற்பனையும் அனுபவிக்கப்போவதைப் பற்றிய கற்பனையும்தான் இடைவெளியை ஏற்படுத்துகிறது.

சூரியோதயத்தின்போது சூரிய அஸ்தமனத்தைக் கற்பனையால்தான் பார்க்கிறோம்.

கண்ணால் பார்ப்பது நிதர்சனம்.

கற்பனையால் பார்ப்பது கனவு.

கனவுக்கும் நனவுக்குமிடையே உள்ள தூரம்தான் இடைவெளி. அதற்குக் காரணம் நனவு அல்ல.

கனவு மட்டுமே இடைவெளியை ஏற்படுத்துகிறது. கற்பனை மட்டுமே இந்த இடைவெளிக்குக் காரணமாக அமைந்துள்ளது.

நாம் இந்தியாவிலிருக்கும்போது அமெரிக்கா நமது கண்ணுக்குத் தெரிவதில்லை. அதைக் கற்பனையால்தான் பார்க்கிறோம். கண்ணால் பார்க்கும் இந்தியாவிலிருந்து கற்பனையால் பார்க்கும் அமெரிக்காவரை உள்ள தூரமே இடைவெளி,

ஆனால்...

சந்திரனும் சூரியனும் வெகு தொலைவுக்கப்பால் இருந்தாலும் நமது கண்களுக்கு நேரடியாகவே தெரிகின்றன. அவற்றை நாம் கற்பனை செய்துதான் பார்க்கவேண்டும் என்ற அவசியம் இல்லை.

காணுகின்ற நாம் பூமியிலிருக்கிறோம். காணப்படும் சூரியன் விண்ணில் தெரிகிறது. இரண்டுமே உண்மைப் பொருட்கள்தாமே? நமக்கும் நாம் காணும் சூரியனுக்கும் இடையில் இடைவெளி இல்லையா?

அதாவது...

காண்பவனுக்கும் காணப்படும் பொருளுக்கும் இடையில் இடைவெளி இல்லையா?

இருவருக்கும் இடையில் பத்து ஒளி ஆண்டு தூரம் இருந்தாலும் சரி, பத்து அடிகள் இருந்தாலும் சரி,

இருவருக்கும் இடையில் இடைவெளி இல்லையா?

இதற்கு நாம் பதில் பெறும் முன்னால், நாம் ஏற்கெனவே பார்த்த காலம் என்னும் பகுதியை மீண்டும் ஒருமுறை சிந்தனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுவது அவசியமாகிறது.

அதாவது...

நமது உணர்வுகளெல்லாம் நிகழ்காலம் என்றும் நமது புலன் நுகர்ச்சிகளெல்லாம் நிகழ்காலம் என்றும் பார்த்தோம்.

கடந்தகாலத்தில் சேகரித்த செய்திகளின் உதவி கொண்டு, கடந்த காலத்து அனுபவங்களின் நினைவுகளைக் கொண்டு...

நாம் நிகழ்காலத்தைப் புரிந்துகொள்ளும் அம்சம் அனைத்தும் கடந்தகாலத்தைச் சேர்ந்தது என்பதைப் பார்த்தோம்.

இங்கே நமது பிரச்சனை என்ன?

சூரியனைப் பார்க்கும்போது நிகழ்ச்சி நடக்கிறது.

அதாவது -

பார்த்தல் என்னும் நிகழ்கால நிகழ்ச்சி நடைபெறுகிறது.

நமது அனுபவம், சிந்தனைகள் தலையிடும்போது அந்த நிகழ்ச்சியை நாம் புரிந்துகொள்கிறோம்.

அதாவது -

பார்த்தல் என்னும் மெய்ப்பொருள் வெறும் இடைவெளியாக மாற்றப்படுகிறது.

அதன் ஒரு பக்கம் நாம் தோன்றுகிறோம். மறு பக்கம் சூரியன் தோன்றுகிறது. காண்பவன் ஒரு பக்கமும் காணப்படும் பொருள் மறுபக்கமும் தோன்றுகின்றன.

பார்த்தல் என்பதில் கற்பனையும் இல்லை; கனவும் இல்லை, நிதர்சனம் மட்டுமே உள்ளது.

ஆனால் -

நான் சூரியனைப் பார்க்கிறேன் என்ற நிலையில் கற்பனைகள் தோன்றுகின்றன.

கற்பனையின் காரணமாகவே காண்பவனும் காணப்படும் பொருளும் தோன்றுகின்றன.

கற்பனைகளுக்கிடையே இடைவெளியும் தோன்றுகிறது.

கற்பனை கலக்கும்போதுதான் உண்மையான அனுபவம், காண்பவன், காணப்படும் பொருள் என இரண்டு பகுதியாக மாறுகிறது. இரண்டு பகுதியற்ற அனுபவங்கள் அனைத்துமே உண்மையானவை. இரண்டு தோன்றும்போது இடைவெளியும் தோன்றுகிறது.

எங்கெல்லாம் இருமை உள்ளதோ அங்கெல்லாம் இடைவெளியும் உருவாகிறது.

கற்பனை கலக்காத அனுபவம் ஏற்படும்போது...

அது புலன் அனுபவமாக இருந்தாலும் சரி,

அங்கு இடைவெளியே கிடையாது.

எந்த அனுபவமாக இருந்தாலும் சரி, அந்தக் கணத்தில் அது உண்மையானதாக இருக்கிறது.

**கற்பனை கலக்காத நிலையில் அது கணந்தோறும் உண்மையானதாகவும் கணந்தோறும் புதியதாகவும் அமைகிறது.**



# 7. கற்பனைகளுக்கு அப்பால்

**நா**ம் பலவிதமான கருத்துகளையும் கொள்கைகளையும் வைத்திருக்கிறோம். நாம் செயல்படுவதற்கு நமது கருத்துகளும், கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட திட்டங்களும் தேவைப்படுகின்றன.

நமது கருத்துகளையும் திட்டங்களையும் வெகுவாகப் பாடுபட்டுச் சேர்த்துள்ளோம். நமது அனுபவங்கள், நமது அறிவுத் திறத்தால் நாம் அனுமானம் செய்தவைகள், நாம் சேகரித்த செய்திகள் இவை போன்று, பல வழிகளாலும் நாம் நமது கருத்துகளையும் திட்டங்களையும் ஏற்படுத்தி உள்ளோம். அந்தக் கருத்துகளையும் திட்டங்களையும் ஆதாரமாகக் கொண்டு நாம் செயல்படுகிறோம்.

திட்டமிட்டுச் செயல்படாத செயல் எதுவும் வெற்றி பெறுவதில்லை. ஆகவே திட்டமிடுகிறோம். நமது செயல்திட்டத்தின் ஒவ்வொரு கட்டத்தையும் ஆழ்ந்து சிந்தித்துத் தீர்மானித்து முடிவெடுக்கிறோம். அதன்படி செயல்களில் ஈடுபட்டு வெற்றிகரமாகச் செய்து முடிக்கிறோம்.

அனைத்துச் செயல்களுமே நமது கருத்துகளை, திட்டங்களை ஆதாரமாகக் கொண்டு அமைந்துள்ளன.

ஒரு மாணவன் விஞ்ஞானியாக வேண்டும் என விரும்புகிறான். அதையே சிந்தித்துத் திட்டமிடுகிறான். அதற்காகப் படிக்கிறான். உழைக்கிறான். திட்டமிட்டபடி விஞ்ஞானியாகி விடுகிறான். அவனுடைய திட்டங்களே, அவனுடைய கருத்துகளே, அவனைச் செயல்பட வைத்துள்ளது.

இவ்வாறு. நமது கருத்துகளின் மூலம் செயல்படுகிறோம். ஆனால்...

நமது கருத்துகள் அனைத்தும் கற்பனையே என்பதை ஏற்கெனவே பார்த்தோம்.

கடந்தகால நினைவுக் குவியலிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டவைதாம் கருத்துகள்.

எவ்வளவு பயன்மிக்க செய்தியாக இருந்தாலும் சரி, அவை கடந்தகால நினைவாக இருக்கும் பட்சத்தில் அது ஒரு கற்பனையே.

கடந்தகாலம் என்பது கடந்து போனது; இறந்து போனது. நினைவுகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டே அது உயிர் வாழ்கிறது. கடந்தகாலம் என்னும் அதனை நாம் கனவினால் மட்டுமே அணுக முடியும். கடந்தகால நினைவுகளின் மூலம் திரட்டப்பட்ட செய்திகள் யாவும், கருத்துக்கள் யாவும், திட்டங்கள் யாவும் கற்பனையே. அதனால் கட்டப்பட்ட கோட்டைகள் யாவும் கனவுக் கோட்டையே.

கற்பனையை ஆதாரமாகக் கொண்ட செயல்கள் யாவும் கனவில் நடக்கும் செயல்களே. நமது வெற்றியும் தோல்வியும் நமது கனவில் நிகழும் வெற்றி தோல்வியே.

நமது அறிவுத்திறத்தால் செய்யும் செயல்கள் அனைத்தும் கனவுப்பிரதேசச் செயல்களே.

ஒரு மலரைப் பார்க்கிறோம். ஓர் இசையைக் கேட்கிறோம். செயல் நடக்கிறது. இந்தச் செயலைச் செய்வதற்கு கருத்து தேவையா? திட்டம் தேவையா?

கருத்துகளோ திட்டங்களோ இல்லாமல் மலரைப் பார்க்க முடியும். கருத்துகளோ திட்டங்களோ இல்லாமல் இசையைக் கேட்க முடியும்.

ஆனால் நாம் அப்படி ப்பார்க்கிறோமா; கேட்கின்றோமா?

மலரைப் பார்த்த வினாடியே அது மலர் என்ற சிந்தனை எற்படுகிறது. இசையைக் கேட்ட வினாடியே அந்த இசையைப் பற்றிய சிந்தனை ஏற்படுகிறது.

சிந்தனை குறுக்கிடாத செயல் ஒன்று உண்டா?

கருத்துகளை ஆதாரமாகக் கொள்ளாத செயல் ஏதேனும் உண்டா?

திட்டமிடப்படாத செயல் எதுவும் உள்ளதா?

கருத்துகளையும் திட்டங்களையும் சார்ந்திடாத கற்பனைகளையும் கனவுகளையும் கலக்காத அந்தச் செயலைத்தான் விடுதலையுற்ற செயல் என்றும் முக்தி பெற்ற செயல் என்றும் குறிப்பிடுகிறார்கள். அப்படி ஒரு பெயரை அதற்குச் சூட்டுவதன் மூலம் அது நமது கனவுகளுக்குள்ளும் கற்பனைகளுக்குள்ளும் அடங்கிவிடுவதில்லை.

அந்த விடுபட்ட செயல் எவ்வாறு இருக்கும்?

அது செயல்பட நமது கனவுகளும் கற்பனைகளும் திட்டங்களும் அறிவாற்றல்களும் தேவைப்படுவதில்லை.

ஆனால்...

தவறுகள் எதுவும் ஏற்படுவதில்லை.

நிறைவுற்ற செயலாகவும் அது அமைந்துள்ளது.

அத்தகைய செயல் எது?

அது எவ்வாறு நிகழ்கிறது?

எவ்வாறு செயல்படுகிறது?

அதுதான் நாம் பார்க்கும் இரண்டாவது பகுதி.



# 8. மெய்ப்பொருளை நோக்கி

இந்த இரண்டாவது பகுதியில் அறிவைக் கடந்த, அறிவுக்கு அப்பாற்பட்ட அறிநிலையைப்பற்றிப் பார்க்கப் போகிறோம்.

அது ஓர் அறிநிலை. ஆனால் அறிவைக் கடந்துள்ளது. அதனால் அது அறிவுபூர்வமானது அன்று என்று சொல்லக்கூடிய தோற்றத்தில் அமைந்துள்ளது. எனவே -

அறிவுடைமையை மறுப்பது போலவும்

அறிவுக்கு எதிரானது போலவும் இது தோற்றமளிக்கிறது.

ஆகவே -

அறிவை ஒதுக்கி விட்டு வாழவேண்டும் என்பதை வலியுறுத்துவது போலவும்

அறிவு வளர்ச்சியடையாத குழந்தைகள் போலவும் மனவளர்ச்சி குன்றியவர்களைப் போலவும் வாழவேண்டும் என்பதை வலியுறுத்துவது போல் - இது தோன்றலாம்.

ஆனால் இது வெறும் தோற்றமே. சரியான தெளிவு அடையா நிலையில், வெறும் கற்பனையால் நமக்கு நாமே ஏற்படுத்திக்கொண்ட தோற்றமே.

ஆகவே இந்த இரண்டாம் பகுதியை நாம் மிகுந்த எச்சரிக்கையுடனும் விழிப்புணர்வுடனும் அணுகியாக வேண்டும்.

இந்தக் காரணத்துக்காகவே இந்தப் பகுதி நமது மத நூல்களில் மறைபொருளாக வைக்கப்பட்டுள்ளது.

ஆனால்,

நமது நாகரிகம் வளர்ந்துவிட்ட நிலையில் - அறிவுக் கோட்பாடுகள் மிகுந்துவிட்ட நிலையில் நாம் எல்லாவற்றையும் ஓரளவுக்குமேல் மூடி மறைத்துவிட முடியாது.

புதியதைத் தெரிந்து கொள்ளும் மனநிலையோடு மட்டுமே இந்த இரண்டாவது பகுதியை நாம் அணுக முடியும்.

புதியதைத் தெரிந்துகொள்ளும் மனநிலையோடு அணுகுதல் என்றால் என்ன?

நாம் இருவரும் ஒரு பெரிய மரத்தின் அடியில் நிற்கிறோம். அந்த

மரத்தின் ஒரு கிளையில் ஒரு வித்தியாசமான பறவை ஒன்று உட்கார்ந்திருக்கிறது. அதை என்னிடம் காட்டுகிறீர்கள். எவ்வளவு அழகான பறவை என்று எனக்குச் சுட்டிக்காட்டுகிறீர்கள். நானும் நீங்கள் காட்டிய திசையில் எட்டிப் பார்க்கிறேன். எனது கண்களுக்கு அந்தப் பறவை தெரியவில்லை. நீங்கள் என்னை உங்கள் அருகே அழைத்து மீண்டும் சுட்டிக்காட்டுகிறீர்கள். உங்களுடைய கண் பார்வையின் கோணத்தில் பார்க்கும் போது எனக்கும் அந்தப் பறவை தெரிகின்றது.

நான் நின்ற இடத்திலிருந்து பார்க்கையில் தெரியாத பறவை, உங்கள் அருகே வந்து பார்க்கையில் தெரிகிறது. நான் நின்ற இடத்திலேயே நின்றுகொண்டு அப்படியொரு பறவை எதுவும் கிடையாது என்று நான் கூறிவிடுவதில்லை. ஏனெனில் உங்கள் வார்த்தையை நான் நம்புகிறேன். உங்கள் வார்த்தையை நம்பி உங்கள் பக்கம் வந்து நீங்கள் பார்த்த கோணத்திலேயே நானும் பார்த்து உங்களுடைய வார்த்தைகளைப் பரிசோதித்து அதன் உண்மையைத் தெரிந்துகொள்கிறேன்.

அதே கண்ணோட்டம் இங்கு தேவைப்படுகிறது. சொல்வதையெல்லாம் அப்படியே நம்பவேண்டுமென்று அவசியமில்லை. என்னதான் சொல்லப்படுகிறதென்று பார்ப்போமே என்ற அளவிலாவது உடன்பாட்டு உணர்வு மட்டும் அவசியம்.

இந்த உடன்பாட்டு உணர்வுடன் அவ்வாறு சுட்டிக்காட்டும் திசையில் பார்த்தால் மாத்திரம் போதும். ஏனெனில்...

இங்கு எந்த ஒழுங்கு முறைகளோ
நெறிமுறைகளோ
பின்பற்றவேண்டிய பயிற்சி முறைகளோ
கிடையாது.

பார்த்தால் மட்டும் போதும்; பின்பற்றத் தேவையில்லை. புரிந்துகொண்டால் மட்டும் போதும்; நினைவில் வைக்கத் தேவையில்லை. விளங்கிக்கொண்டால் மட்டும் போதும்; முயற்சி செய்யத் தேவையில்லை.

மெய்ப்பொருள் - பரம்பொருள் - எங்கோ வெகுதொலைவில் இருப்பது போன்று நாம் தவறாகப் புரிந்துகொண்டால் அதற்கு மத நூல்கள் பொறுப்பல்ல.

உண்மை என்பது இங்கே இப்போதே இருந்தாக வேண்டும். இனிவரும் எதிர்காலத்தில்தான் உண்மை வெளிப்படும் என்றோ மெய்ப்பொருள் கண்டுபிடிக்கப்படும் என்றோ எண்ணுவோமானால் அது தவறு.

மெய்ப்பொருள் இதோ, இங்கே உள்ளது. அது நமது முயற்சியின் விளைவாலும் உழைப்பின் விளைவாலும் ஏற்படுத்தப்படக்கூடிய ஒன்றோ அல்லது நாம் அடையக்கூடிய ஒன்றோ அல்ல.

நமக்கு அன்னியமானதைத்தான் நமது முயற்சியின் மூலம் அடையமுடியும்.

மெய்ப்பொருளை அறிய நமது முயற்சியோ உழைப்போ தேவையில்லை. மாறாக உழைப்பும் முயற்சியும்,இல்லாத நிலையிலேயே மெய்ப்பொருள் விளக்கமடைகிறது. உள்ளதை உள்ளவாறு அறிந்திட முயற்சியோ உழைப்போ தேவையில்லை அல்லவா?

நமது உழைப்பும் முயற்சியும் அதனை மறைக்கவே துணைபுரிகின்றன. நாம் கண்டுகொள்ள முயலும்போது உண்மை ஒளிந்துகொள்கிறது. முயலும்போது உண்மையைத் தவறவிட்டு விடுகிறோம். முயற்சியின் முட்டாள்தனத்தைப் புரிந்துகொண்ட நிலையில் முயற்சி நின்றுவிடுகிறது. முயலாத நிலையில் மெய்ப்பொருள் தோற்றமாகிறது. ஆகவே மெய்ப்பொருளை அறிய முயற்சி தேவையில்லை.

முயற்சி தேவையில்லாத காரணத்தினால் நாம் செய்ய வேண்டியது எதுவுமே இல்லை.

பார்த்தால் மட்டும் போதும்; பின்பற்றத் தேவையில்லை. புரிந்துகொண்டால் மட்டும் போதும்; செயல்படுத்தத் தேவையில்லை. விளங்கிக்கொண்டால் மட்டும் போதும். நினைவில் வைக்கத் தேவையில்லை.



# 9. மூவகைக் காட்சிகள்

**நா**ம் ஓர் அழகான மல்ரைப் பார்க்கிறோம். முதல் வினாடியில் நமது கண்கள் மட்டும் மலரோடு தொடர்பு கொள்கின்றன. இரண்டவாது வினாடியில் நமது மனம் தொடர்பு கொள்ள வருகிறது. நம்முடைய மனம்தான் நாம் பார்க்கும் மலரைப் பற்றிய செய்திகளையெல்லாம் கூறுகிறது. அதுதான் சொல்கிறது, இது ரோஜா மலர் என்று. அது சொல்லாவிடில் நாம் எதைப் பார்க்கிறோம் என்பதைப் புரிந்துகொள்ள முடியாது. அதுதான் சொல்கிறது. இது என்ன மலர் என்று. இந்த மன முதல் வினாடியில் செயல்படுவதில்லை. இரண்டாவது வினாடியில்தா செயல்படுகின்றது.

நமது கண்கள்தான் முதல் வினாடியில் செயல்பட்டு காட்சிகளை படம் பிடித்து, நமது மனம் என்னும் அலுவலகத்துக்கு அனுப்புகிறது. மனத்தில் நடக்கும் இனம் கண்டு கொள்ளும் எண்ணம் இரண்டாவது கட் நிகழ்ச்சிதான்.

கண்ணால் பார்ப்பது முதற்கட்ட நிகழ்ச்சி.

அதனைக் கருத்தால் இனங்கண்டு கொள்வது இரண்டாவது கட் நிகழ்ச்சி.

காதால் ஒரு சப்தத்தைக் கேட்பது முதற்கட்ட நிகழ்ச்சி. அதனை இனங்கண்டு கொள்வது இரண்டாவது கட்ட நிகழ்ச்சி.

முதற்கட்ட நிகழ்ச்சி என்பது முழுக்க முழுக்க, புலன்கள் மட்டுமே செயல்படும் நிலையாகும்.

இரண்டாவது கட்ட நிகழ்ச்சியில் எண்ணம் செயல்பட்டு புலன் கண்ட காட்சியைப் பற்றி அடையாளம் காணப்படுகிறது.

முதற்காட்சி - புலன் காட்சி

இரண்டாம் காட்சி - மனக் காட்சி

புலன் காட்சி நிர்வாணமானது; கருத்து என்னும் ஆடை அங்கு கிடையாது,

மனக் காட்சியில் ஆடை அணிவிக்கப்பட்டுவிடுகிறது. நாம் பார்க்கும் பொருளுக்குப் பெயர் சூட்டப்பட்டுவிடுகிறது.

நமது எல்லா அனுபவங்களும் இப்படித்தான் அமைந்துள்ளன.

முதலில் புலன் காட்சி ஏற்படுகிறது. ஒரு பொருளைப் பார்க்கிறோம்; கண்ணால் பார்க்கிறோம்; காதால் கேட்கிறோம்; அல்லது வேறு ஏதாவது புலன்களின் வழியாகத் தொடர்புகொள்கிறோம். மறுகணம் அதைப் பற்றிய கருத்து நமக்குத் தோன்றுகிறது. நாம் பார்ப்பது ரோஜா மலர் என்றோ கேட்பது புல்லாங்குழல் இசை என்றோ புரிந்துகொள்கிறோம்.

புலன் காட்சியின் மூலம் உணர்வதை மனக் காட்சியின் மூலம் புரிந்துகொள்கிறோம்.

புலன் காட்சிக்கும் மனக்காட்சிக்கும் இடையே இடைவெளி இருக்கிறது.

புலன் காட்சி நிகழ்ந்த பிறகுதான் மனக் காட்சி ஆரம்பமாகிறது.

சில நேரங்களில் புலன் காட்சிக்கும் மனக் காட்சிக்கும் இடையே அதிக இடைவெளி இருக்கிறது. சில வேளைகளில் குறைந்த இடைவெளி இருக்கிறது. எப்படியாயினும் இரண்டுக்கும் இடையில் இடைவெளி இருக்கிறது.

நாம் ஓர் அறையினுள் படுத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். வாசலில் யாரோ நமது பெயரைச் சொல்லி அழைக்கிறார்கள். குரல் கேட்கிறது. ஆனால் அந்தக் குரலைக்கொண்டு நம்மை அழைத்தது யார் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் பழக்கமான குரல். நமது நினைவுகளை ஒழுங்குபடுத்தி நினைத்துப் பார்க்கிறோம். சில வினாடிகள் இடைவெளிக்குப் பிறகு அது யாருடைய குரல் என்பதை அடையாளம் கண்டுகொள்கிறோம்.

நமது கருத்துகள் யாவும் நமது நினைவுப்பகுதியில் செறிந்து கிடப்பதால் சரியான கருத்தைக் கண்டுபிடித்து புலன் உணர்வு காட்டும் பொருளின் மீது போர்த்துவதற்கு சற்று கால அவகாசம் தேவைப்படுகிறது.

புலன்கள் காட்டும் காட்சியை மனத்தால் புரிந்துகொள்ள சில நேரங்களில் இப்படி கால அவகாசம் தேவைப்பட்டாலும் பல நேரங்களில் இரண்டுக்கும் இடையில் இடைவெளியே கிடையாதோ என்று சொல்லக்கூடிய வகையில் மனக்காட்சியும் மிக விரைவாக ஏற்பட்டுவிடுகிறது.

உதாரணமாக நமது நண்பனைப் பார்த்த மாத்திரத்தில் நண்பன் என்று புரிந்துகொள்கிறோம். நமது மனைவியைப் பார்த்த மாத்திரத்தில் மனைவி என்று புரிந்துகொள்கிறோம்.

எப்படி ஆயினும் இரண்டு காட்சிகளுக்கும் இடையில் இடைவெளி உள்ளது. புலன் காட்சி ஏற்பட்ட பிறகுதான் மனக் காட்சி

ஏற்பட முடியும். இரண்டுக்கும் இடைவெளியே கிடையாது என்று சொல்லக்கூடிய வகையில் பல நேரங்களில் தோன்றலாம். ஆயினும் இடைவெளி உள்ளது.

புலன் காட்சி என்பது புனிதமானது; உண்மையானது; மெய்ப்பொருளோடு தொடர்புடையது; ஆன்மீக அம்சம் உள்ளது.

ஐம்புலன்களை அடக்கி வைக்கவேண்டும் என்னும் கோட்பாடுகளையும் தத்துவங்களையும் நாம் படித்திருக்கிறோம். அது சம்பந்தமான சிந்தனைகளை எல்லாம் தற்போது ஒதுக்கி வைத்துவிட்டுத் தொடர்ந்து படியுங்கள். இப்போது புலனடக்கம் என்ற செய்தியைப் போட்டு குழம்பிக்கொள்ள வேண்டாம்.

புலன்கள் சுத்தமானவை. அழுக்கு எதுவும் புலன்களில் கிடையாது. எது நமது முன்னால் இருக்கிறதோ அதனை அப்படியே கண்ணாடிபோல் பிரதிபலித்துக் காட்டுவதே புலன்களின் வேலை.

நாம் ஒரு மலரைப் பார்க்கிறோம். கண்கள் மலரைப் பார்க்கின்றன. வெளியே இருக்கும் மலர் நமது கண்கள் வழியே நமக்குள் பிரதிபலிக்கின்றது. இப்போது...

நமக்கு வெளியேயும் மலர்;

நமக்கு உள்ளேயும் மலர்.

இவ்வாறே நமது புலன்கள் அனைத்தும் வெளியே உள்ள அனைத்தையும் உள்ளே கொண்டுவருகின்றன.

அகமும் புறமும் சந்திக்க வகை செய்பவைதாம் இந்தப் புலன்கள்.

புறத்திலுள்ள காட்சியும் அகத்தில் பிரதிபலிக்கும் காட்சியும் ஒன்றாகவே உள்ளன. வெளியேயும் மலர்; உள்ளேயும் மலர். வெளியேயும் இசை; உள்ளேயும் இசை.

அகமும் புறமும் ஒன்றாகிறது. இங்கு உண்மையும் யதார்த்தமும் கள்ளங்கபடமற்ற மென்மையும் இருக்கின்றது. இது ஓர் இணைந்த நிலை. அன்பு நிலை.

அடுத்து உள்ளது மனக் காட்சி.

நமது நினைவுகளைப் பயன்படுத்துகிறோம். நமது மனதில் பலவிதமான நினைவுகள் செறிந்தும் உறைந்தும் கிடக்கின்றன.

நமது புலன் உணர்வுகள், நமது மனப்பரப்பிற்குள் எடுத்துச் செல்லப்பட்டு, நினைவுகள் அடிப்படையில் பெயர் சூட்டப்படுகின்றன. புரிந்துகொள்ளப்படுகின்றன. நமது சிந்தனை செயல்படாவிட்டால் நமது மனம் செய்ல்படாவிட்டால் நாம் எதனையும் புரிந்துகொள்ள முடியாது.

ஒவ்வொரு பொருளையும் அதற்குரிய தன்மையோடு சேர்த்து அடையாளம் காட்டித்தரும் வேலையைச் செய்வதுதான் மனத்தின் பணி. இதுதான் மனக் காட்சி.

நிர்வாணமாக இருந்த புலன் உணர்வுகளுக்கு கருத்து என்னும் ஆடை இங்கே அணிவிக்கப்படுகிறது. நிர்வாணமாக எடுத்துவரப்படும் புலன் உணர்வுகள் யாவும் அதற்குரிய ஆடைகளைப் பெறுகின்றன.

நாம் ஒரு மலரை நமது கண்களால் பார்க்கிறோம். மலரின் உருவத்தை நமது கண்கள் படம்பிடித்து நமக்குள்ளே கொண்டுவருகின்றன. உருவத்தை வடிவமைத்துக் கொடுப்பது புலன்களின் வேலை.

ஓர் இசையைக் கேட்கிறோம். அதனை ஒலி வடிவில் நமக்குள் கொண்டு வருகின்றன நமது செவிகள்.

இவ்வாறு நமது புலன்களின் நுகர்ச்சிகளான ஒளி, ஓசை, வாசனை, சுவை ஆகியவை யாவும் உணர்வு வடிவில், வடிவம் கொள்கின்றன.

வடிவத்தைப் படைப்பது புலன்களின் வேலை; அவற்றுக்குப் பெயரிட்டு புரிந்துகொள்வது மனத்தின் வேலை.

புலன் காட்சியில் உணர்வு வேலை செய்கிறது.

மனக் காட்சியில் நமது அறிவு வேலை செய்கிறது.

புலன்கள் கள்ளங்கபடமற்றவை; யதார்த்தமானவை; உண்மையானவை; நாம் எதை உணர்கிறோம் என்று புரிந்துகொள்ளாமலே உணர்ந்து கொண்டிருப்பவை.

மனக் காட்சியில் அறிவு வேலை செய்கிறது; ஒவ்வொன்றும் அடையாளம் காட்டப்படுகிறது; அறிந்து கொள்ளப்படுகிறது. இது ஞானத்தின் வெளிப்பாடு; தூய்மையான அறிவின் வெளிப்பாடு.

அடுத்து வருவது மூன்றாம் அம்சம்.

முதலில் வந்தது புலன் காட்சி.

இரண்டாவது வந்தது மனக் காட்சி.

மூன்றாவதாக வருவது திரிபுக் காட்சி.

நமது பற்றுகளினாலும் பந்தபாச உணர்ச்சிகளினாலும் ஏற்படுவதுதான் இந்த மூன்றாவது காட்சி.

புலன் காட்சியில் எது இருக்கிறதோ அதைப் பார்க்கிறோம்; உணர்கிறோம்.

மனக் காட்சியில் - எதைப்பார்க்கிறோமோ அதைப்

புரிந்துகொள்கிறோம்; எதை உணருகிறோமோ அதைப் புரிந்துகொள்கிறோம்.

இந்த மூன்றாவது நிலையில் நாம் பார்ப்பது - புரிந்து கொள்வதோடு நின்றுவிடுவதில்லை. புரிந்துகொண்டதைத் தேர்ந்தெடுக்கிறோம். இது எனக்கு வேண்டியது என்றோ வேண்டாதது என்றோ ஒரு பிரிவை ஏற்படுத்துகிறோம்.

ஓர் அழகான பொருளைப் பார்க்கிறோம்; அதனைப் புரிந்து கொள்கிறோம்; அது இன்ன வகையில் நமக்குப் பயன்படும் என்றும், திருப்தி ஏற்படுத்தும் என்றும் எண்ணுகிறோம்; அதனைச் சொந்தம் கொண்டாட முயற்சி செய்கிறோம்.

முதற்காட்சியான புலன் காட்சியும்,

இரண்டாவது காட்சியான மனக் காட்சியும்,

அனைவருக்கும் ஒரே தன்மையிலேயே இருக்கின்றன.

ஆனால்...

இந்த மூன்றாவது காட்சி ஒருவருக்கொருவர் வித்தியாசமானது.

உங்களுக்கு சிவப்பு வண்ணமுள்ள மலரும் துணியும் மிகவும் பிடிக்கும்; அது உங்களுக்கு ஒரு மகிழ்ச்சியை வழங்கும்.

எனக்கு அது பிடிக்காது; மகிழ்ச்சியையும் வழங்காது.

மஞ்சள் நிற மலர், துணி எனக்குப் பிடிக்கும். மகிழ்ச்சியை வழங்கும்.

உங்களுக்கு வேறு விதமான ரசனை. அதனால் அவை உங்களுக்குப் பிடிக்காமலிருக்கலாம்.

நமது விருப்பு, வெறுப்புகளை நாம் பார்க்கும் பொருட்களின் மீது சுமத்துகிறோம். இதனால் பொருட்களின் தராதரம் வித்தியாசப்படுத்தப்படுகிறது. வேண்டிய பொருள் - வேண்டாத பொருள், வேண்டியவர் - வேண்டாதவர்.

உங்களுக்குப் பிடித்தமான பொருள் எனக்குப் பிடிப்பதில்லை.

ஒரே பொருள் -

இரண்டு நபருக்கு இரண்டு தன்மையில் தோற்றம் அளிக்கிறது. இப்படி இரண்டு விதமாகத் திரிவுபடுவதால் இது திரிபுக் காட்சியாக உள்ளது.

ஒவ்வொருவரும் தன்னையே பிரதானமாகக் கருதுகின்றனர். தனது விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் பொருட்களைப் பார்க்கின்றனர்.

நமது விருப்பம், நமது மகிழ்ச்சி என்பதை மட்டும் அளவுகோலாக வைத்துக்கொண்டு பொருட்களைப் பற்றிப்பிடிக்கிறோம். பற்றிப்பிடித்தல் என்பது இந்த மூன்றாவது காட்சியில்தான் ஏற்படுகிறது.

முதல் இரண்டு காட்சியிலும் விருப்பு வெறுப்போ பற்றிப்பிடித்தலோ கிடையாது.

நாம் ஓர் அழகான மலரைப் பார்க்கிறோம்; அருவருப்பான சாக்கடையைப் பார்க்கிறோம். நாம் பார்ப்பதெல்லாம் நமது விழித்திரையில் பிரதிபலிக்கின்றன. உணரப்படுகின்றன. அழகற்ற பொருள் என்பதால் விழித்திரை தனது செயல்பாட்டை நிறுத்திக்கொள்வது இல்லை.

இனிமையான இசையைக் கேட்கிறோம்; கொடூரமான இரைச்சலைக் கேட்கிறோம். நமது செவிப்புலன்கள் இரண்டையுமே ஏற்றுக் கிரகிக்கின்றன.

நமது புலன்கள் அனைத்தும் கண்ணாடி போன்றவை. அதன் முன்னால் எதிர்ப்படுவன எல்லாவற்றையுமே அவை அப்படியே பிரதிபலித்துக் காட்டும். வேண்டியவை வேண்டாதவை என்று தமது பிரதிபலிக்கும் தன்மையை நிறுத்தி வைத்துக்கொள்வது இல்லை. தமது முன்னால் எதிர்ப்படுவன எல்லாவற்றையும் அக்கணத்திலேயே பிரதிபலித்துக் காட்டும். இவ்வாறே நமது புலன்கள் அனைத்தும் அவற்றிற்கு எதிர்ப்படுவன எல்லாவற்றையும் ஏற்று உணர்ந்துகொள்கின்றன.

இரண்டாவது காட்சியான மனக்காட்சியிலும் விருப்பு வெறுப்புகள் கிடையாது. நடுநிலையிலிருந்து அறிவு செயல்படுகிறது. உண்மையை அப்படியே கூறுகிறது; மலரை மலர் என்று கூறுகிறது; மனிதனை மனிதன் என்று கூறுகிறது. எனக்குப் பிடித்த மலர், எனக்குப் பிடித்த மனிதன் என்று கூறுவதில்லை. ஒவ்வொரு பொருளும் அதனதன் நிலையில் எப்படி இருக்கிறது என்பதைக் கருத்தாக்கி அறிவுபூர்வமாக விளக்கிக் காட்டுகிறது. நமக்குப் பிடித்தமானதா பிடித்தம் இல்லாததா என்று காட்டுவதில்லை.

வேண்டியவை வேண்டாதவை எல்லாம் திரிபுக் காட்சியான மூன்றாவது காட்சியில்தான் இடம்பெறுகின்றன.

இரண்டாவது காட்சிக்கும் மூன்றாவது காட்சிக்கும் என்னதான் வித்தியாசம்?

தங்கக் கட்டியையும் செங்கல் கட்டியையும் பார்க்கிறோம். அறிவைப் பயன்படுத்திப் பார்க்கிறோம். தங்கக்கட்டியின் இயல்புகள் நமக்குத் தெரிகிறது; அதன் பயன்பாடு தெரிகிறது. செங்கல் கட்டியையும் அறிவால் பார்க்கிறோம். அதன் பயன்பாடு தெரிகிறது; இரண்டுக்கும் வேறுபாடு தெரிகிறது. இந்த வேறுபாடு என்பது அதனளவில் உள்ள வேறுபாடு. செங்கல்லில் இருந்து தங்கக்கட்டி வேறுபட்டது. தங்கக் கட்டியிலிருந்து செங்கல் வேறுபட்டது. இந்த வேறுபாடு அறிவு பூர்வமானது. தங்கத்தின் தன்மை வேறு; செங்கல்லின் தன்மை வேறு. இந்த வேறுபாடு விஞ்ஞான பூர்வமானது. இதிலிருந்து அது வேறுபட்டது. அதிலிருந்து இது வேறுபட்டது. இது மனக் காட்சி. இரண்டாம் நிலை.

ரோட்டில் நடந்து செல்லும் ஒருவரது காலில் செங்கல் கட்டி இடறினால் மிகவும் வருத்தப்படுவார். செங்கல்லை அங்கே போட்டவரை சபிப்பார். அதே நேரம், இடறியது தங்கக்கட்டியாக இருந்தால் மகிழ்ச்சியால் தன்னை மறந்துவிடுவார். அடிபட்ட இடத்தில் வலி தெரியாது. தங்கக் கட்டியை வேறு எவரும் பார்த்துச் சொந்தங்கொண்டாடி விடுவாரோ என்று பயப்படுவார். இது மூன்றாம் நிலைக் காட்சியான திரிபுக் காட்சி நிகழும் போது ஏற்படும் நிகழ்ச்சி.

இரண்டாம் நிலைக் காட்சியான மனக் காட்சிக்கும் மூன்றாம் நிலைக் காட்சியான திரிபுக் காட்சிக்கும் என்ன வேறுபாடு?

மூன்றாம் நிலைக்காட்சியில், நாம் நமது கோணத்தில் தங்கத்தையும் செங்கல்லையும் பார்க்கிறோம். நமக்கு அதிக பயன்தருவது எது, குறைந்த பயன்தருவது எது என்ற தகுதி அடிப்படையில் பார்க்கிறோம். ஒவ்வொரு பொருளைப் பொறுத்தவரையிலும் நாம் ஒரு பக்கமும் அந்தப் பொருளை மறுபக்கமும் வைத்துப் பார்க்கிறோம். நாம் ஒரு வரிசையில் இருக்கிறோம். நாம் தொடர்பு கொள்ளும் பொருட்களெல்லாம் எதிர்வரிசையில் இருக்கின்றன. நமக்குத் தங்கம் எத்தனை சதவீதம் பயன்பாடுடையதாக இருக்கிறது; செங்கல் எத்தனை சதவீதம் பயன்பாடுடையதாக இருக்கிறது என்ற கண்ணோட்டத்தில் பொருட்களை நாம் பிரித்துப் பார்க்கிறோம். நம்முடைய பயன்பாட்டின் அளவில் தங்கத்திற்கும் செங்கல்லுக்கும் இடையே உள்ள வேறுபாடு இந்த மூன்றாம் காட்சியில் தோன்றுகிறது. இந்தப் பயன்பாட்டை அனுசரித்து நமது இன்ப துன்ப உணர்வுகள் அமைந்துள்ளன. நம்மை அந்தப் பொருட்கள் எவ்வளவு தூரம் மகிழ்வடையச் செய்கின்றன; எவ்வளவு

தூரம் துன்பமடையச் செய்கின்றன என்ற கண்ணோட்டத்தில் அப்பொருட்களைத் தராதரப்படுத்துகிறோம். தங்கம் நமக்குக் கிடைத்தால் அதிக மகிழ்ச்சி. நம்மை விட்டுப் போய்விட்டால் அதிகத் துன்பம். செங்கல் நமக்குக் கிடைத்தால் மகிழ்ச்சி கிடையாது. நம்மை விட்டுப் போனால் துன்பமும் கிடையாது.

முதல் இரண்டு நிலைக் காட்சிகளிலும் இன்பம் - துன்பம் சம்பந்தப்பட்ட பிணைப்பு எதுவும் கிடையாது.

இந்த மூன்றாம் நிலைக்காட்சியில் இத்தகைய பிணைப்பு உள்ளது. நாம் நம்மைச் சிலவற்றோடு பிணைத்துக்கொள்கிறோம்.

சிலவற்றை நம்மோடு பிணைத்துக் கொள்வதில் இன்பமும் அவை நம்மை விட்டுப் போய்விட்டால் துன்பமும் அடைகிறோம். இந்த பந்த உணர்வே பொருட்களை நமக்குள் விரோதம்கொள்ளச் செய்கின்றன.

இரண்டாம் நிலைக் காட்சியிலும் பொருட்கள் கருத்து வடிவில் பிரித்துக்காட்டப்படுகின்றன. கல்லுக்கும் தங்கத்துக்கும் வேறுபாடு காட்டப்படுகிறது. ஆனால் அங்கு விரோத அமைப்பு இல்லை. ஒவ்வொன்றும் அதனதன் தன்மையில் பிரித்துக்காட்டப்பட்டாலும் இந்த இரண்டாம் நிலைக்காட்சியில் ஓர் ஒருங்கிணைவு உள்ளது.

ஒரு தாய் தனது குழந்தைகள் அனைவரையும் பிரித்துப் பார்த்தாலும் அனைவர் மீதும் ஒன்றுபோலவே பாசம் காட்டுகிறாள். பிரிவிலும் ஓர் ஒருங்கிணைப்பு உள்ளது.

ஆனால் தனது குழந்தையையும் மாற்றான் குழந்தையையும் அப்படிப் பார்ப்பதில்லை. இங்கு ஒருங்கிணைவான உறவு இல்லை. தன் குழந்தை மீது காட்டும் பாசத்தை அவளால் அடுத்த குழந்தையிடம் காட்ட முடியாது. எனவே இந்தப் பிரிவில் ஒருங்கிணைவு கிடையாது; முரண்பாடே உள்ளது.

முதல் இரண்டு காட்சிகளில் உடன்பாடு உள்ளது.

மூன்றாம் காட்சியில் முரண்பாடு உள்ளது.

இந்த மூன்று காட்சிகளுமே ஒன்றோடு ஒன்றாக இணைந்து கிடக்கின்றன.

முதல் இரண்டு காட்சிகளுக்கும் இடையே எப்படி இடைவெளி உள்ளதோ அதேபோன்று இந்த இரண்டாவது, மூன்றாவது காட்சிகளுக்கிடையேயும் இடைவெளி உள்ளது.

இரண்டாம் நிலைக் காட்சி தோன்றிய பிறகே மூன்றாம் நிலைக் காட்சி தோன்றுகிறது. இரண்டாம் நிலைக் காட்சியான மனக் காட்சிக்கும்,

மூன்றாம் நிலைக் காட்சியான திரிபுக் காட்சிக்கும் இடையிலும் இடைவெளியே இல்லாததுபோல் தோன்றினாலும்கூட அங்கும் இடைவெளி உள்ளது.

இந்த இடைவெளிகள் யாவும் புரிந்துகொள்ளக்கூடிய அளவில் வேறு வேறாகத் தெரிவதில்லை.

ஒரு பொருளைப் பார்த்த மாத்திரத்திலேயே அது என்ன பொருள் என்பது தெரிந்துவிடுகிறது. அது என்ன பொருள் என்று தெரிந்த மாத்திரத்திலேயே இது எனக்குப் பிடிக்கும், பிடிக்காது என்று கூறிவிடுகிறோம். வினாடி நேரத்துக்குள் மூன்று காட்சிகளும் ஒன்றன் மீது ஒன்றாகச் சேர்ந்து நிகழ்ந்துவிடுகின்றன. அதனால் நமது அனுபவம் எல்லாம் இந்த மூன்று காட்சிகளின் கலவையினால் அமைக்கப்பட்டுள்ளது.

இது மூன்று அடுக்குகளாக அமைந்துள்ளது என்பதை நாம் சாதாரணமாகப் புரிந்துகொள்ள முடிவதில்லை. ஆழ்ந்து கவனித்தால்தான் அவை மூன்று அடுக்குகளாக இருப்பதும் அவைகளுக்குள் இடைவெளி இருப்பதும் புலப்படும்.

**முதற்காட்சியில் கிடைக்கும் அனுபவம் எளிமையானது; இனிமையானது; சுதந்திரமானது. இதன் சூட்சுமான அம்சமே யோகநிலை ஆகும்.**

**இரண்டாம் நிலைக்காட்சியில் கிடைக்கும் அனுபவம் அறிவை அடிப்படையாகக் கொண்டது. இதன் சூட்சுமமான அம்சமே ஞானம் ஆகும்.**

**மூன்றாம் நிலைக்காட்சியின் அனுபவமே அஞ்ஞானமாகும். இதுதான் அறியாமை. இது ஓர் இருள் நிலை; மயக்க நிலை. இதனையே தமது யதார்த்த நிலையென்று கருதி மனிதர்கள் மயங்கிக் கிடக்கிறார்கள்; துன்பத்திலும் துயரத்திலும் துவண்டு போய்க்கிடக்கிறார்கள்; பயத்திலும் பொறாமையிலும் பரிதவித்து வாழ்ந்து வருகிறார்கள்.**



# 10. அஞ்ஞானத்தின் ஆதிக்கம்

மனிதராகிய நாம் ஒவ்வொரு காலத்திலும் துன்பத்தோடு போராடி வருகிறோம். துன்பமும் பயமும் நம்மைப் பயமுறுத்திக் தாக்கிவருகின்றன. நாம் அவற்றை எதிர்த்துப் போராடுகிறோம்; அல்லது தப்பி ஓடுகிறோம். ஆனாலும் அவை நம்மைவிட்டு நீங்குவதில்லை.

அவற்றை எதிர்ப்பதற்கு நாம் நமது ஒவ்வொரு கால கட்டத்திலும் பலவிதமான மார்க்கங்களை உண்டு பண்ணி அவற்றைப் பயன்படுத்துகின்றோம்; போராடிப் பார்க்கிறோம்; தப்பி ஓடிப் பார்க்கிறோம்.

**நம்முடைய போராட்டம் எல்லாம் நிலையான இன்பத்தை அடைவதேயாகும். நமது முயற்சிகளும் மார்க்கங்களும் நிலையான இன்பத்தை வழங்குவதாக வாக்குறுதி கூறும் ஒரு நடைமுறையே.**

**'எனக்கு இன்பம் வேண்டும்' என்று நீங்கள் கேட்டவுடன் அல்லது 'எனது துன்பமெல்லாம் மறையவேண்டும்' என்று நீங்கள் கேட்டவுடன் நான் உங்களுக்கு வழிகாட்ட வந்துவிடுகிறேன்.**

**''இதைச் செய்யுங்கள்; அதைச் செய்யுங்கள் உங்கள் துன்பமெல்லாம் மறைந்துவிடும்; நீங்கள் தேடிய இன்பமெல்லாம் கிடைத்துவிடும்'' என்று உங்களுக்கு வழிகாட்டுகிறேன்.**

**'நான் ஏன் துன்பப்படுகிறேன்? நான் ஏன் இன்பத்தை நாடுகிறேன்?' என்று உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளச் சொல்லி அறிவுறுத்துவதில்லை. அதற்கு மாறாக, நீங்கள் செயல்படுவதற்கு ஒரு செயல்முறையை உங்களுக்கு அறிமுகம் செய்து வைத்துவிடுகிறேன்.**

நாம் ஏன் இந்த இன்ப துன்ப அமைப்புகளில் சிக்கித் தவிக்கிறோம்? அதிலிருந்து ஏன் விடுபட முடியவில்லை?

நாம் ஏற்கனவே பார்த்த மூன்றாம் நிலைக்காட்சியின் இயல்பே இதுதான். அது நமது யதார்த்த வாழ்க்கை அமைப்பாக நமக்குத் தோன்றுவதால் அதிலிருந்து அதற்கு அப்பால் போகமுடியும் என்று நமக்குத் தோன்றவில்லை. **விலகி ஓட வேண்டும் என்ற முயற்சியும் இன்பத்தைத் தேடும் முயற்சியே.** அந்த முயற்சி நடக்கும் இடமும் இந்த மூன்றாம் நிலைக்காட்சியின் எல்லைக்குள்ளேதான் இருக்கிறது.

அதாவது.

நமது அனுபவங்களை மூன்று தன்மையில் பிரித்துப் பார்த்தோம்.

நாம் நமது புலன்கள் மூலம் நமக்கு வெளியே உள்ள பொருட்களுடன் தொடர்பு கொள்கிறோம். நமது புலன்களே நமக்கு பொருட்களைக் காட்டித்தருகின்றன. புலன்கள் வேலை செய்யாவிட்டால் நாம் எந்தப் பொருட்களையும் அறிய முடியாது.

முதலில் புலன்களின் மூலம் உணர்கிறோம். இது புலன் காட்சி.

இரண்டாவதாக வருவது மனம்.

புலன்கள் கண்ட காட்சிக்குப் பொருள் கூறி விளக்கம் கொடுப்பது மனம். மனத்தில் மண்டிக் கிடக்கும் செய்திகள் அனைத்தின் மூலமாக நமது மனம், புலன்கள் கொண்டுவரும் உணர்வுகளுக்குக் கருத்துபூர்வமான, அறிவுபூர்வமான வடிவம் கொடுக்கிறது. இது மனக் காட்சி.

நமது மனம் அடையாளம் காட்டிய பொருளை நமது மூன்றாவது நிலை, விருப்பு - வெறுப்பின் அடிப்படையில் பற்றிப்பிடிக்கிறது. இது மூன்றாவது காட்சி. இது திரிபுக் காட்சி.

முதல் காட்சி புலன் காட்சி. இது யதார்த்தமானது. எல்லோருக்கும் பொதுவானது. நமது புலன்கள் அனைத்தும் நல்ல கண்ணாடியைப் போன்றது. கண்டதையெல்லாம் அப்படி அப்படியே பிரதிபலிக்கும்.

இரண்டாம் காட்சி மனக் காட்சி. இது ஒரு செய்திக் காட்சி. இங்கு ஒவ்வொரு பொருளுக்கும் தன்னிலை விளக்கம் கிடைக்கிறது. எவருடைய விருப்பு வெறுப்புகளின் அடிப்படையிலும் விளக்கம் அளிக்கப்படுவதில்லை.

மூன்றாம் காட்சி திரிபுக் காட்சி. இங்கு இது எனக்கு வேண்டும் இது எனக்கு வேண்டாம் என்ற இன்ப துன்ப அமைப்புகளை ஆதாரமாகக்கொண்டு நாம் காணும் பொருட்களெல்லாம் பிரிவு செய்து பார்க்கப்படுகின்றன.

இரண்டாம் காட்சி ஞானக் காட்சி.

மூன்றாம் காட்சி அஞ்ஞானக் காட்சி.

இந்த அஞ்ஞானக் காட்சி நமது இயல்பு நிலையாகவும் யதார்த்த நிலையாகவும் அமைந்துபோய்விட்டது. அதிலிருந்து விடுபட நாம் முயல்வதும் அதிலேயே நம்மை இன்னும் ஆழமாகப் பிணைத்துவிடுகிறது. நாம் அஞ்ஞானத்தில் இருக்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் அஞ்ஞானத்தில் இருக்கிறோம். அஞ்ஞானத்தினால் ஏற்படும் சில முரண்பட்ட உணர்வுகளை நாம் ஆதரிக்கிறோம்.

சில வேளைகளில் நமக்குப் பயம் ஏற்படுகிறது. இது நியாயமான பயம்தான் என்று அதனை நியாயப்படுத்துகிறோம். சில வேளைகளில் நமக்குக் கோபம் ஏற்படுகிறது. இது நியாயமான கோபந்தான் என்று நியாயப்படுத்துகிறோம். பிறகு கோபத்தையும் பயங்களையும் வெல்ல பாடுபடுகிறோம். நம்முடைய முயற்சி அமைப்பின் யதார்த்தமான தன்மையிலும்கூட முரண்பாடுகள் உள்ளன. மூன்றாம்நிலைக் காட்சியில் இத்தகைய குளறுபடிகள் எல்லாம் மிகவும் சகஜமானவை. இங்கு இத்தகைய குளறுபடிகள் எல்லாம் ஏற்படத்தான் செய்யும்.

இந்த மூன்றாம்நிலைக் காட்சியிலிருந்து முழுமையாக விடுபட முடியுமா என்ற கேள்விக்குச் செல்லும் முன் –

இந்த மூன்றாம்நிலைக் காட்சி இல்லாமல் வாழ முடியுமா, இந்த மூன்றாம்நிலைக் காட்சியே இல்லாத வாழ்வு எப்படி அமைந்திருக்கும் என்ற கேள்விகளைப் பார்ப்போம்.

முதல் நிலைக் காட்சி அனைவருக்கும் பொதுவானது. ஒரு பொருளை புலனின் மூலம் அறிகிறோம். இரண்டாம் நிலைக்காட்சியின் மூலம் அதனைப் புரிந்து கொள்கிறோம்.

இந்த இரண்டு நிலைகளும் அனைவருக்கும் பொதுவானது. அனைவருமே மலரை மலர் என்று பார்க்கிறோம். மனிதனை மனிதன் என்று பார்க்கிறோம்.

நாம் செயல்படுவதற்கு இந்த இரண்டுமே போதுமானது. உணர்வும், அறிவும் போதுமானது.

விருப்பு வெறுப்பு எந்த வகையிலும் தேவையில்லை. நாம் இந்த மூன்றாம் நிலைக்காட்சியின் எல்லைக்குள் நுழையாமல் முதல் இரண்டு நிலைக் காட்சிகளுக்குள்ளே அறிவு பூர்வமான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியும். விருப்பு வெறுப்பு இல்லாததால் அது ஒரு உப்புச் சப்பற்ற – பைத்தியக்காரத்தனமான வாழ்க்கை போலத் தோன்றலாம். **அது எத்தகைய உன்னதமான வாழ்க்கை என்று அதை வாழ்ந்து பார்த்தால்தான் தெரியும்.** அந்த உன்னதமான வாழ்க்கையின் மீது ஆசைப்படவும் முடியாது. ஆசைப்படுவதும் மூன்றாம் நிலையின் எல்லைக்குள்ளேதான் நடைபெற முடியும்.

முதல் இரண்டு நிலைகளும் நடக்க, நமது முயற்சி தேவை இல்லை. அவை யதார்த்தமாகவும் தாமாகவும் நடப்பவையாகும். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டலும் நாம் முயன்றாலும் முயலாவிட்டாலும்

இந்த முதலிரண்டு நிலைகளும் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உண்மையில் சொல்லப்போனால்...

நமது விருப்பங்களும் முயற்சிகளும் அவற்றிற்குத் தடையை ஏற்படுத்தி மூன்றாவது நிலையான அஞ்ஞான நிலைக்கே இழுத்துச் செல்கின்றன.

இப்போது நமது பிரச்சனைதான் என்ன?

மூன்றாவது நிலை செயல்படுகிறது. அதனால் முதல் இரண்டு நிலைகளும் முக்கியத்துவம் இழந்து மூன்றாம் நிலைக்குத் தம்மை விட்டுக்கொடுத்துவிடுகின்றன. மூன்றாம் நிலை ஆதிக்கம் செலுத்துகிறது. இந்த மூன்றாம் நிலையின் ஆதிக்கத்தைக் குறைப்பது எவ்வாறு?

இதுதான் பிரச்சனை.

முதல் இரண்டு நிலைகளும் செயல்பட வேண்டும். மூன்றாம் நிலைக் காட்சி ஆதிக்கம் செலுத்தக்கூடாது.

இந்த ஆய்வு எந்தப் பகுதி நிலையில் ஏற்படுகிறது?

இரண்டாம் நிலைக் காட்சியிலா அல்லது

மூன்றாம் நிலைக் காட்சியிலா?

ஆய்வு என்றால் என்ன என்பதை முதலில் சற்று விளங்கிக்கொள்வோம். இரண்டாம் நிலையில் செய்யப்படும் ஆய்வுக்கும் மூன்றாம் நிலையில் செய்யப்படும் ஆய்வுக்கும் உள்ள வித்தியாசத்தை இதன் மூலம் நாம் விளங்கிக் கொள்ள முடியும்.

மூன்றாம் நிலையில் செய்யப்படும் ஆய்வானது முடிவுகளை எதிர்பார்த்து முடிவுகளின் மீது கொண்ட பற்றுடன் செய்யப்படுகிறது. நமது விருப்பங்களை அடித்தளமாகக் கொண்டது. வெறுப்புகளால் பாதிக்கப்படக்கூடியது.

இரண்டாம் நிலையில் செயல்படும் ஆய்வு சுதந்திரமானது. விருப்பு வெறுப்புகளுக்கு உட்பட்டதன்று. அறிவு பூர்வமானது. உண்மையை மட்டும், உள்ளதை உள்ளவாறு காட்டுவது. இது செயல்படுவதற்கு நோக்கம் எதுவும் தேவையில்லை. உள்ளதை உள்ளவாறு காண்பதும் புரிந்துகொள்வதும் இந்த இரண்டாம் நிலையில் யதார்த்தமான தன்மை. அதற்கான உயிரோட்டம் அதிலேயே இருக்கிறது. அதற்கு அன்னியமான உந்து சக்தி எதுவும், நோக்கம் என்ற பெயரில் அங்கு தேவைப்படாது.

ஆனால் மூன்றாம் நிலையில் உள்ள ஆய்வுக்கு நோக்கமும்

எதிர்பார்ப்பும் உண்டு. அவை இல்லாமல் ஆய்வு எதுவும் அங்கு கிடையாது.

இரண்டாவது நிலைக்காட்சியில் செயல்படும் ஆய்வுக்கு நோக்கம் எதுவும் இல்லாததால் அது எதற்கும் கட்டுப்பட்டதன்று. அதனால் அது சுதந்திரமாகச் செயல்படுகிறது. உள்ளதை உள்ளவாறு காண்கிறது.

இத்தகைய ஆய்வில்தான் உண்மையைக் கண்டுபிடிக்க முடியும்.

மூன்றாம் நிலைக் காட்சி ஆதிக்கம் செலுத்துகிறது. முதலிரண்டு நிலைக் காட்சிகளும் வெளிப்படாமல் அதனுள் மறைந்து நிற்கின்றன. இந்த மூன்றாம் நிலைக் காட்சி ஏன் இப்படி ஆதிக்கம் செலுத்துகிறது? அது இந்த ஆதிக்கத்தை எப்போது இழக்கும்?

**இரண்டாம் நிலைக் காட்சியிலிருந்து நம்மை அறியாமலேயே நாம் மூன்றாம் நிலைக்கு வந்து பழகிவிட்டோம். நமது வளர்ப்பு முறையும், நமது சமுதாயச் சிந்தனைகளும் பழக்க வழக்கங்களும் இந்த மூன்றாவது நிலையை ஆதாரமாகக் கொண்டே இயங்கி வருவதால் அதை நாம் யதார்த்தம் என்ற நிலையிலேயே அங்கீகரித்துக்கொள்கிறோம்.**

இந்த மூன்றாம் நிலையிலிருந்து விடுபட்டுச் செயல்படும் சாத்தியக்கூறு எதுவும் உள்ளதா?

இதற்கான விடையைக் காண்பது யார்?

நீங்கள் கேள்வி கேட்டு அதற்கு இன்னொருவர் பதில் சொல்வ உங்களைத் திருப்தி செய்வதா?

கேள்வி வேறு பதில் வேறு அல்ல. கேள்விதான் பதில். கேள்வி என்பது பதிலை நோக்கிச் செல்லும் ஒரு பாலம். கேள்வி கேட்பவர்தான் அந்தப் பாலத்தைப் பயன்படுத்த வேண்டும்.



# 11. அஞ்ஞானத்திற்கு அப்பால்

**இப்போது நாம் மிக முக்கியமான பகுதிக்குள் பிரவேசித்துள்ளோம். இங்கு நாம் எடுத்து வைக்க வேண்டிய ஒவ்வொரு அடியும் மிகவும் முக்கியத்துவம் உடையது. ஏனெனில் இது அனுபவ பூர்வமானது. இங்கு நாம் நமது அனுபவம் சார்ந்த அக்கறையைத் துணையாகக் கொண்டுதான் அணுக முடியும். உள்ளார்ந்த ஈடுபாட்டைக் காட்டாமல் நாம் அடி எடுத்து வைப்போமானால் நமது அடிகள் தவறிவிடும் வாய்ப்பு உள்ளது.**

புதிய கணக்கு ஒன்றைப் படிக்க முற்படும் மாணவனைப் போல நாம் இங்கு அடியெடுத்து வைப்போம்.

நாம் என்ன பார்த்தோம்?

முதல் நிலைக் காட்சி செயல்படுகிறது.

தொடர்ந்து இரண்டாம் நிலைக் காட்சி செயல்படுகிறது. அதனைத் தொடர்ந்து மூன்றாம் நிலைக்காட்சி செயல்படுகிறது.

முதற்காட்சியில் புலன்கள் மட்டும் செயல்படும், புலன் அறிவு மாத்திரம் உள்ளது.

இரண்டாம் நிலைக் காட்சியில் அறிவு மாத்திரம் செயல்படும், தூய்மையான நிலை உள்ளது.

மூன்றாம் நிலைக் காட்சியில் விருப்பு வெறுப்புகளின் வாயிலாகச் செயல்படும் அஞ்ஞானக்காட்சி உள்ளது.

இந்த **மூன்றாம் நிலைக் காட்சியின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவது எவ்வாறு?**

**இது நமது கேள்வி மட்டுமன்று. ஆன்மீக உலகில் தலையாய கேள்வியும் இதுதான்.**

ஆகவே...

**இது சாதாரண கேள்வியன்று.**

**நாம் கேட்க வேண்டிய முக்கியமான கேள்வியே இதுதான்.** ஆன்மீக உலகில் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய செய்தி இங்குதான் உள்ளது. நாம் தெரிந்துகொள்ள வேண்டியதன் முக்கியமான திருப்பு முனையும் இங்குதான் உள்ளது.

ஆனாலும்...

நாம் அறிந்து கொள்ள வேண்டிய இந்தச் செய்தி மிக மிகச் சாதாரணமானது. மிக மிக எளிதானது.

எனவே...

இது மிக மிக நுண்மையானதாக உள்ளது..

அதனை அணுக நாமும் நுண்மையாகச் செயல்பட்டால்தான் முடியும். நுண்மையுடன் அணுகினால்தான் முடியும்.

நமது கேள்வி என்ன?

இந்த மூன்றாம் நிலைக் காட்சியான திரிபுக் காட்சியிலிருந்து விடுபடுவது எவ்வாறு? அதன் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவது எவ்வாறு?

முதல் இரண்டு காட்சிகளான புலன் காட்சியும் மனக் காட்சியும் இயல்பானவை; இயற்கையானவை; அனைவருக்கும் பொதுவானவை.

மூன்றாம் நிலைக் காட்சி ஆதிக்கம் செலுத்தும்போது முதல் இரண்டு காட்சிகளும் மறைந்துவிடுகின்றன. தம்மை வெளிக்காட்டிக் கொள்ளாமல் மறைந்துகொள்கின்றன.

மூன்றாம் நிலைக்காட்சி நடக்கும்போது, முதல் இரண்டு காட்சிகளின் தன்மை எவ்வாறு இருக்கிறது? அவற்றில் என்ன மாறுதல் ஏற்படுகிறது? அவை அப்படியே இருக்கின்றனவா அல்லது அவற்றின் தன்மைகள் மாறிவிடுகின்றனவா?

பால் தூய்மையாக இருக்கிறது. அதில் சிறிது மோர் சேர்த்ததும் பால் தயிராகி விடுகிறது. பாலே தயிராகி விட்டது. இப்போது பால் என்று தனியாக எதுவும் அங்கு இல்லை.

இத்தகைய நிலையில் முதல் இரண்டு காட்சிகளும், மூன்றாவது காட்சியாக நிரந்தரமாக மாறிவிட்டனவா? இனி தயிரிலிருந்து பாலைத் திரும்பப் பெற முடியாத அளவில், முதல் இரண்டு காட்சிகளும் நிரந்தரமாகவே மூன்றாவது நிலைக்காட்சிகளாக மாறிவிட்டனவா?

அப்படி மாறிவிட்டால்...

மாறியது, மாறியதுதான்.

புறப்பட்ட நிலைக்கு மீண்டும் வர முடியாது.

இங்கு அத்தகைய மாறுதல் ஏற்பட்டுவிட்டதா?

அல்லது...

உண்மையில் மாறுதல் எதுவும் ஏற்படாமல், மாறுதல் ஏற்பட்டது போன்ற தோற்றம் மட்டுந்தான் உள்ளதா?

அதாவது,

தண்ணீர் பனிக்கட்டியாக மாறிவிடுகிறது. அது எந்த நேரத்திலும் மீண்டும் தண்ணீராக மாறிவிடும். பனிக்கட்டியாக மாறியது ஒரு தற்காலிகமான மாறுதலே. அந்தச் சூழ்நிலை மாறவும், அது மீண்டும் தண்ணீராக மாறுகின்றது.

நமது மூன்று நிலைகளும் இப்படித்தான் உள்ளதா? முதலிரண்டு நிலைகளும் தற்காலிகமாக, சில சூழ்நிலையின் காரணமாக மூன்றாம் நிலையாக மாறியிருக்கும் பட்சத்தில்...

சூழ்நிலை மாறும்போது, தற்காலிகமான நிலையும் மாறிவிடும். மூன்றாம் நிலை மாறி, முதல் இரண்டு நிலைகளும் வந்துவிடும்.

இப்படிப்பட்ட தன்மையில்தான் நமது மூன்று நிலைகளும் அமைந்துள்ளனவா?

பால் நிரந்தரமாகத் தயிராகி இருப்பது போல் முதல் இரண்டு நிலைகளும் மூன்றாம் நிலையாகிவிட்டதா? அல்லது...

தண்ணீர் தற்காலிகமாகப் பனிக்கட்டியாகியுள்ளது போல் முதல் இரண்டு நிலைகளும் தற்காலிகமாக மூன்றாம் நிலையாகியுள்ளதா?

உண்மையில் முதல் உதாரணத்தைப் போல்தான் நடந்து வருகிறது. பால் நிரந்தரமாகத் தயிராகிவிட்டதுபோல் இதுவும் அப்படியே ஆகிவிட்டது. தயிர் ஆனது ஆனதுதான். இனி பாலாக வழி இல்லை. காகிதம் தீயில் எரிந்து சாம்பலாகிவிட்டதுபோல் மாற்றம் ஏற்பட்டுள்ளது. சாம்பல் மீண்டும் காகிதமாக முடியாது. இது நிரந்தர மாற்றம். மாறியது மாறியதுதான். புறப்பட்ட இடத்துக்கு இனி வரமுடியாது. முதல் இரண்டு நிலைகளும் மூன்றாம் நிலையாக மாறியது மாறியதுதான். இனி முதற்பகுதிக்கு வருவது என்பது சாத்தியமே இல்லை.

அப்படியானால்...

இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுதான் என்ன?

**தூ**ய்மையான நீர் ஓடும் நீரோடையை - ஆற்றைப் - பார்த்திருக்கிறீர்களா?

சலசலத்து ஓடும் நீரைப் பார்த்திருக்கிறீர்களா?

ஆற்றினுள் குளிப்பதற்கென்று பல படித்துறைகள் சில ஊர்களில் கட்டப்பட்டிருக்கும். பல ஆண்டு காலமாக அந்த படித்துறைகளில் இறங்கி மக்கள் குளிக்கின்றனர். ஆறு அசுத்தமாகிவிட்டதா? படித்துறைகள் குளிப்பதற்கு முடியாதவாறு ஆகிவிட்டனவா? என்று போனாலும்

ஆற்றில் சுத்தமான நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. நாம் நீராடுவதற்குத் தகுதியான நிலையில் இருந்துவருகிறது.

பல காலமும் மக்கள் நீராடியதால் ஏற்பட்ட அழுக்குகள் எல்லாம் என்ன ஆயிற்று? யாராவது வந்து சுத்தம் செய்து அந்த அழுக்குகளை மாத்திரம் அப்புறப்படுத்தினார்களா?

ஆறு ஓடிக்கொண்டே இருக்கிறது. அதோடு சேர்ந்து அழுக்கும் ஓடிக்கொண்டே இருக்கிறது. அழுக்கு நீர் ஓடவும் புது நீர் வருகிறது. எப்போதும் புதுப்பித்தல் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. அதனால் நாம் பார்க்கும் ஆறும் நீரோடையும் எப்பொழுதும் புதுப் பொலிவோடு திகழ்ந்துவருகிறது.

நாம் பார்க்கும் ஆற்றைப் போலவும் நீரோடையைப் போலவும் நமது மூன்று நிலைகளும் இயங்கிக் கொண்டிருக்கின்றன.

எந்த நிலையும் தேக்கமடைவதில்லை. எல்லா நிலைகளும் நொடிப்பொழுதுதான் நிலைபெற்றுள்ளது. தோன்றுவதும் அழிந்துவிடுவதுமாக உள்ளது. முதல் நிலையின் முடிவில் இரண்டாம் நிலை தோன்றுகிறது. இரண்டாம் நிலையில் முடிவில் மூன்றாம் நிலை தோன்றுகிறது. மூன்றாம் நிலையும் நொடிப்பொழுதில் முடிந்து போய் விடுகிறது. ஆனால்...

ஒவ்வொரு நிலையும் கணந்தோறும் புதுப்பிக்கப்படுகிறது. புதுப்பிக்கப்படாமலிருந்தால் ஒவ்வொரு நிலைக் காட்சியும் அந்தந்த கணத்திலேயே மடிந்துவிடும்.

அதனால் நாம் எதையும் மாற்றியமைக்கத் தேவையில்லை.

நமது முயற்சிக்கு எந்தத் தேவையும் இல்லை.

இந்த மூன்று நிலைகளும் மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்படுகிறது. ஒவ்வொரு நிலையும் ஆற்றைப் போல ஓடி வந்து கொண்டே இருக்கிறது. நாம் அவற்றை அழைக்க வேண்டுவது இல்லை.

நமது புலன்கள் சதா இயங்கிக்கொண்டே இருக்கின்றன. புலன் இயக்கமெல்லாம் முதல் நிலைக் காட்சியென்று நாம் ஏற்கனவே பார்த்துவிட்டோம். முதல் நிலைக் காட்சி - புலன் இயக்கம் - நிற்காமல் இயக்கத்தில் உள்ளது. அதேபோல் இரண்டாம் நிலைக் காட்சியான மனமும் தொடர்ந்து இயங்கிக்கொண்டே இருக்கிறது. மூன்றாம் நிலைக் காட்சியும் தொடர்ந்து இயங்கிக்கொண்டே இருக்கிறது. புதுப்பித்தல் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது.

ஒவ்வொரு நிலையும் தானாகவே மடிந்துவிடுகின்றது. அதே நேரம் தானாகவே புதுப்பிக்கப்பட்டும்விடுகிறது. இது ஒரு தொடர் கதையாக நடந்துவருகிறது.

இப்போது நமது பிரச்சினைதான் என்ன?

நமது துன்பக்காட்சி நிறைந்த மூன்றாவது நிலைக்காட்சியை எவ்வாறு நிறுத்துவது? எவ்வாறு வழிக்குக்கொண்டு வருவது? எவ்வாறு மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்படாமல் அதைப் பார்த்துக்கொள்வது? அதற்கு வாய்ப்பு உள்ளதா? சாத்தியந்தானா?

...இதுதான் நமது பிரச்சினை.

நமது இயக்கத்தை மீண்டும் பார்ப்போம்.

முதலில் புலன் இயங்குகிறது; மலரைப் பார்க்கிறது; மனம் அது மலர்தான் என்பதைப் புரிந்துகொள்கிறது.

முதல் காட்சிக்கும் இரண்டாம் காட்சிக்கும் இடையில் இடைவெளி உள்ளது. இரண்டாம் காட்சியை அடுத்தும் இடைவெளி உள்ளது. அதனை அடுத்துதான் மூன்றாம்நிலைக் காட்சியான விருப்பு வெறுப்புள்ள காட்சி தோன்றுகிறது.

புலன் காட்சி - 1
இடைவெளி - 2
மனக் காட்சி - 3
இடைவெளி - 4
திரிபுக் காட்சி - 5

புலன் காட்சிக்குப் பிறகு 5வது அடுக்காக இந்த மூன்றாம் நிலை திரிபுக் காட்சி அமைந்துள்ளது. நான்கு பகுதிகளைக் கடந்துதான் இந்த ஐந்தாவது பகுதி அமைகிறது. முதல் அடுக்காக அமைந்த புலன்காட்சி ஒவ்வொரு அடுக்காகக் கடந்து ஐந்தாவது அடுக்காக மாறி அமைவதற்குள் புதிய புலன் காட்சி தோன்றிவிடுகிறது.

நாம் ஒரு சப்தத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிறோம். அந்தச் சப்தம், இரண்டாம் நிலையில் என்ன சப்தம் என்று புரிந்துகொள்ளப்படுகிறது. மூன்றாம் நிலையில் விருப்பு வெறுப்பு கலந்து அனுபவிக்கப்படுகிறது.

அவற்றுக்கு இடையிலுள்ள இரண்டு இடைவெளிகளையும் கடந்து இந்த மூன்றாம் நிலை அனுபவம் ஏற்படுகிறது.

முதலாவது வினாடியில் நாம் சப்தத்தைக் கேட்கிறோம். அது நமக்குள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும்போது, முதல் நிலையிலிருக்கும்

புலன்கள் என்ன செய்துகொண்டிருக்கின்றன? புலன் நுகர்ச்சி விநாடிக்கு விநாடி புதிது புதிதாக வந்து கொண்டிருக்கிறது. மூன்றாம் நிலை வந்த பிறகுதான் புலன்கள் திறந்துகொண்டு புதிய நுகர்ச்சியில் ஈடுபடுவது என்று கிடையாது. புலன் நுகர்ச்சி தங்கு தடையில்லாமல் நடந்துகொண்டே இருக்கிறது.

நமது புலன்கள் புதிய நுகர்ச்சியில் கவனம் செலுத்தி வந்தால், ஏற்கெனவே புலன்களால் நுகரப்பட்டவை கருத்தாலும் விருப்பு வெறுப்பாலும் பாதிக்கப்படாது.

புலன் நுகர்ச்சி என்பது முன்னோக்கிய நிலை. புதியவற்றை எதிர்கொள்ளும் நிலை. அவற்றைப் புரிந்து கொள்தலும் விரும்புதலும் அதற்குப் பின்வரும் நிலை.

முன்னோக்கிய நிலைக்கு முடிவென்பதே கிடையாது. அது போகப்போக வந்துகொண்டே இருக்கும். அங்கு விருப்பு வெறுப்புகளின் ஆதிக்கம் இருக்காது.

நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. எரிந்த நெருப்பு புகையாக மாறுகிறது. புகையாக மாறிவிட்டவுடன் நெருப்பு அணைந்துவிடுவதில்லை. தொடர்ந்து நெருப்பு எரிந்துகொண்டே இருக்கிறது. எரிய எரிய புகையாக மாறுகிறது. நெருப்பு புகையாக மாறுகிறதே தவிர, நெருப்பு புகையல்ல. நெருப்பு வேறு; புகை வேறு. புகைக்குக் காரணமாக நெருப்பு இருந்தாலும் நெருப்பினுள் புகை கிடையாது.

முரண்பட்ட உணர்வுகளுக்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் உறைவிடமான மூன்றாம் நிலையைத் தோற்றுவிக்கும் ஆதாரம், இந்த முதல் நிலையான புலன் காட்சியே. புலன் காட்சியை அடித்தளமாகக் கொண்டுதான் மூன்றாம் நிலைக்காட்சியான திரிபுக் காட்சி தோன்றுகிறது.

புலன் காட்சியை ஆதாரமாகக் கொண்டு திரிபுக் காட்சி தோன்றினாலும் புலன் காட்சியில் திரிபு இல்லை. புலன் காட்சி திரிபுக் காட்சியாக மாறிவிட்டதால், புலன் காட்சி நின்றுபோய்விடுவதில்லை. நெருப்பு தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கிறது; புகையும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

நாம் நெருப்போடு இருந்தால் புகையோடு இல்லை.

நாம் புகையோடு இருந்தால் நெருப்போடு இல்லை.

நாம் புலன் காட்சியில் இருந்தால் திரிபுக் காட்சியில் இல்லை.

நாம் திரிபுக் காட்சியில் இருந்தால் புலன் காட்சியில் இல்லை.

அருவி விழுவது போல் வந்துகொண்டே இருக்கும் புலன் காட்சியிலே நாம் நிலைபெறுவோமானால் திரிபுக் காட்சியின் ஆதிக்கம் வெகுவாகக் குறைந்துவிடும். திரிபுக் காட்சிக்கே செல்லவேண்டிய அவசியமில்லாமல் வாழ்ந்திடுவது எவ்வாறு என்பதும் புரிந்துவிடும்.



# 12. ஆறாவது அறிவு

புலன் காட்சி மென்மையானது.. திரிபுக் காட்சி முரட்டுத்தனமானது. புலன் காட்சி கள்ளங்கபடமற்றது. திரிபுக் காட்சி சூதுமிக்கது. புலன் காட்சி சுதந்தரமானது; எதையும் ஏற்றுக்கொள்ளக் கூடியது. திரிபுக் காட்சி ஒப்பிட்டுப் பார்க்கக் கூடியது. விருப்பு வெறுப்புக்கு அடிமையானது.

திரிபுக் காட்சி தனக்கு வேண்டியதை முரட்டுத்தனமாகப் பற்றக் கூடியது. அதனால் அது தனது விருப்பு வெறுப்பின் கீழ் அனைத்தையும் ஆதிக்கம் செலுத்துகிறது. புலன் காட்சியையும் ஆதிக்கம் செலுத்துகிறது. தனது விருப்பு வெறுப்புகளை புலன், பொறிகள் மீது ஏற்றுகிறது. அழகான காட்சியைத்தான் காணவேண்டும்; இனிமையான இசையைத்தான் விரும்பிக் கேட்கவேண்டும்; சுவையான உணவை மட்டுந்தான் சுவைக்கவேண்டும் - என்று நமது புலன் நுகர்ச்சிகளை நிர்ப்பந்தம் செய்கிறது.

புலன் காட்சி, திரிபுக் காட்சியின் ஆதிக்கம் இல்லாத முதல் நிலையில் சுதந்தரமாக இயங்குகிறது: புலன் காட்சியின் சுதந்தரத் தன்மையை திரிபுக் காட்சியின் முரட்டுத்தன்மை ஆதிக்கம் செலுத்தி பறித்துக்கொள்கிறது. அதே போல்...

திரிபுக் காட்சியின் முரட்டுத் தன்மையை.

புலன் காட்சியின் மென்மைத் தன்மையால் அரவணைத்து,

புலன் காட்சியின் கட்டுப்பாட்டுக்குள் -

திரிபுக் காட்சியைக் கொண்டு வரமுடியுமா?

அப்படிக் கொண்டுவரும் பட்சத்தில் திரிபுக் காட்சி தூய்மை அடைந்தே தீரும்; மென்மைத் தன்மையைப் பெற்றே தீரும்.

ஆனால்...

அப்படித் திரிபுக் காட்சியைக் கட்டுப்படுத்துவது சாத்தியம்தானா?

திரிபுக் காட்சி என்பது என்ன?

ஒரு பொருளை நம்முடைய விருப்பு வெறுப்புக்கு ஏற்றவாறு பார்க்கிறோம். விரும்பும் பொருள் விரும்பப்படாத பொருள் என அவற்றை வகைப்படுத்துகிறோம். விரும்பும் பொருள் கிடைத்தால் மகிழ்ச்சியையும் அப்பொருள் நம்மை விட்டுப் போனால் துன்பத்தையும் அடைகிறோம்.

நமது இன்ப - துன்ப நுகர்ச்சியே இந்த திரிபுக் காட்சியாக இருக்கிறது. இந்த இன்ப - துன்ப அனுபவமே திரிபுக் காட்சியாக உள்ளது.

இன்ப - துன்ப வடிவில் அனுபவமாகும் இந்தத் திரிபுக் காட்சியை நாம் எவ்வாறு அறிகிறோம்?

இந்நிலையில், அறிதல் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

அறிதல் என்றால் என்ன?

ஒரு பொருளை எப்படி அறிகிறோம்?

பால் என்றால் என்ன என்பது நம் அனைவக்ருகும் தெரியும். அதனை நாம் எப்படி அறிந்துகொண்டோம்?

பாலைப் பார்க்கிறோம். பாலின் வெண்மையான நிறம் நமக்குத் தெரிகிறது; அது திரவ வடிவில் இருப்பது தெரிகிறது. நமது புலன்களால் இதனைப் பார்க்கிறோம். அடுத்து பாலைச் சுவைத்துப் பார்க்கிறோம். நமது புலன் உணர்வு பாலின் சுவையைக் கிரகித்து அறிகிறது. நாம் பார்த்ததும் ருசித்ததும் நமது உணர்வாக ஆகிறது; நமது அனுபவமாக ஆகிறது. இவ்வாறு நாம் ஒவ்வொன்றையும் நமது உணர்வின் மூலமே உணர்ந்து அறிகிறோம். பாலைப்பற்றி நாம் எவ்வளவுதான் அடுத்தவர் சொல்லிக் கேள்விப்பட்டாலும் புத்தகம் புத்தமாகப் படித்தாலும் அவை நமது உணர்வாகவோ அனுபவமாகவோ ஆகாது. நேரடியாக அனுபவிக்கும் உணர்வே உண்மையான அறிதல் ஆகும்.

அறிதல் என்பது உணர்வு சம்பந்தப்பட்டது. உணர்வால் உணர்ந்து அறிவதுதான் உண்மையான அறிவாகும்.

இனி தொடர்ந்து திரிபுக்காட்சியைப் பற்றி பார்ப்போம். திரிபுக் காட்சியைக் கட்டுப்படுத்த வழிமுறைகள் ஏதேனும் உண்டா என்ற ஆய்வில் ஈடுபட்டு வந்தோம்.

திரிபுக் காட்சி என்றால் என்ன? நாம் காணும் பொருட்களை, வேண்டிய பொருள், வேண்டாத பொருள் என நம்முடைய விருப்பு-வெறுப்புகளினால் வேறுபடுத்துகின்றோம். விருப்பத்துக்குரிய பொருளைப் பெறுவதில் இன்பமும், அதனை இழந்துவிட்டால் துன்பமும் அடைகின்றோம். இந்த இன்ப - துன்ப நுகர்ச்சியே திரிபுக்காட்சியாகும்.

இன்ப - துன்ப அனுபவம் நமக்கு ஏற்படுகிறது என்பது உண்மையானதுதானா? அல்லது கற்பனையா? ஒரு அனுமானக் கருத்தா? கனவைப் போன்ற ஒரு காட்சியா?

நமது இன்ப - துன்ப அனுபவங்கள் பொய்யானதல்ல.

அவை யாவும் நிதர்சனமாக ஏற்படுகின்றன. அவை கற்பனை அல்ல; கருத்து அல்ல. இன்பத்தையும் துன்பத்தையும் நாம் நேரடியாக அனுபவிக்கிறோம்; உணருகிறோம்.

இன்பமும் பொய்; துன்பமும் பொய்; எல்லாம் மாயை - என்று யார் சொன்னாலும் நாம் நம்பப்போவதில்லை.

ஏனெனில் நமது இன்ப - துன்ப உணர்வுகளை நாமே அனுபவித்து அறிந்துள்ளோம். நமது இன்பங்களையும் துன்பங்களையும் பயங்களையும் கோபங்களயையும் நாம் உணர்வு பூர்வமாக அனுபவித்து வருகிறோம். அவற்றுக்கான காரணம் வேண்டுமானால் பொய்யாகவோ அல்லது மாயையாகவோ இருக்கலாம். ஆனால் நாம் அனுபவிப்பது பொய்யன்று; உண்மை. பயத்தினால் உடல் நடுங்குவதையும் கவலையால் உடல் சோர்வடைவதையும் நாம் மிகவும் வெளிப்படையாகவே பார்த்துவருகிறோம். ஆக -

நமது அனுபவங்கள் நிதர்சனமாக உள்ளன.

அவற்றை -

உணர்ந்து அறிகிறோம்; உணர்ந்து அனுபவிக்கிறோம்.

உணர்வைப் பொறுத்த அளவில்தான் உண்மையின் முத்திரை குத்தப்படுகிறது. நாம் உணர்வதைத்தான் உண்மை என்று கூறுகிறோம். உணர்வைப் பற்றி இன்னும் சற்று பார்ப்போம்.

உணர்வது எது, உணரப்படுவது எது?

எதைக் கொண்டு எதனை உணர்கிறோம்?

மலரைக் கண்ணால் பார்க்கிறோம்; இசையைக் காதால் கேட்கின்றோம்; வாசனையை நாசியால் உணர்கிறோம்; சுவையை நாவால் உணர்கிறோம்; குளிரை, வெப்பத்தை தோலால் உணர்கிறோம்; ஐந்து புலன்களின் வாயிலாக அனைத்தையும் உணர்ந்து அறிகிறோம்.

நம் மனத்தில் ஏற்படும் இன்ப துன்பத்தை எந்தக் கருவியால் உணர்கிறோம்? எந்தப் பொறியால் உணர்கிறோம்? எந்தப் புலனால் அறிகிறோம்?

மனத்தில் அனுபவிக்கப்படும் இன்ப துன்ப உணர்வுகள் யாவும், பயம், கவலை, ஆசை போன்ற உணர்வுகள் யாவும் எந்தப் பொறி, புலன்களால் அறியப்படுகின்றன?

ஐந்து புலன்களைப்பற்றித் தெரிந்திருக்கிறோம்.

நமது மனத்தினுள் அனுபவிக்கப்படும் உணர்வுகளை அறிந்திடும் இந்த ஆறாவது புலன் எது? .

இதற்குச் சிலர் -

இதயம் என்று பெயர் கொடுக்கின்றனர்.

எந்தப் பெயர் வேண்டுமானலும் கொடுத்துக்கொள்ளுங்கள். இந்த ஆறாவது புலன் ஒன்று இருப்பதைத் தெரிந்துகொண்டால் போதுமானது.

இது...

நமது மனத்தினுள்ளேயே...

அடிமனமாக இருந்துகொண்டு மனத்தில் தோன்றும் உணர்வுகளை உணர்ந்து அறிகிறது.

இதுவும் ஒரு புலனே.

ஆக -

திரிபுக் காட்சியில் தோன்றும் அனுபவத்தையும் புலன்களின் மூலமே அறிகிறோம்; புலன் காட்சியின் மூலமே அறிகிறோம். புலன் காட்சி அனைத்தையும் உள்ளடக்கும் அளவில் விரிந்து பரந்து உள்ளது.

புலன் காட்சிக்கு அடுத்து வரும் மனக் காட்சியாயினும் சரி, அதனையும் அடுத்துவரும் திரிபுக் காட்சியாயினும் சரி...

அனைத்தையும் உள்ளடக்கும் வகையில் புலன் காட்சி மிகவும் விசாலமானது. அனைத்தையும் ஏற்றுக்கொள்ளக் கூடியது

நாம் எதை அறிந்தாலும் புலன் காட்சியின் மூலமே அறிந்தாக வேண்டும். புலன் காட்சிக்குள் வராத எதுவும் நம்மைப் பொறுத்தவரையில் இல்லையென்றே கூறிவிடலாம். எவையெல்லாம் இருப்பதாக அறிகிறோமோ அவை அனைத்தையும் புலன் காட்சியின் மூலமாகவே அறிகிறோம். எனவே...

புலன் காட்சி ஆரம்பமாகவும் முடிவாகவும் உள்ளது.

அருவி போல் கொட்டும், ஆறு போல் ஓடும் புலன் காட்சியில் அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அனைத்தும் புனிதமாக்கப்படுகின்றன.

திரிபுக் காட்சியும் புலன் காட்சிக்குள் அடங்கிப்போய்விடுகிறது. புலன் காட்சியினுள் அடங்கிய திரிபுக் காட்சி, தன்னுடைய பலத்தை இழந்து சாந்தியடைகிறது.

எந்த உணர்விலும் தவறு கிடையாது; எந்தக் காட்சியிலும் தப்பு கிடையாது: எதை வேண்டுமானாலும் எண்ணலாம்; எதை வேண்டுமானாலும் உணரலாம். இன்பமாயினும் சரி; துன்பமாயினும் சரி.

ஒரே ஒரு நிபந்தனை...

அவை அனைத்தும் முதல் நிலை காட்சியான புலன் காட்சியினுள் உட்படுத்தப்பட வேண்டும்.

எது எது, எப்படி எப்படி உள்ளதோ...

அதை அதை, அப்படி அப்படியே, உள்ளதை உள்ளவாறு, சேர்த்தலோ, நீக்கலோ இன்றி கண்ணாடிபோல் காட்டுவதுதான் புலன் காட்சி. புலன் காட்சியும் இதுதான்; புனிதக் காட்சியும் இதுதான்.

புலன் காட்சி நடைபெறுகையில் உள்ளும் புறமும் ஒன்றாகிறது; சமநிலை ஏற்படுகிறது; சாந்தி நிலவுகிறது. அது மட்டுமா? அங்கு ஏற்படும் அதீத உணர்வுகளையெல்லாம் நீங்கள் தாம் நேரடியாக அனுபவித்துப் பார்க்க வேண்டும்.

ஆனால்...

முயற்சியினால் ஏற்படும் நிலை அன்று அது. அது...

இயற்கையாக நடைபெற வேண்டும்.

இயல்பாக நடைபெற வேண்டும்.

ஏனெனில் முயற்சியும்...

திரிபுக் காட்சியின் ஆதிக்கத்தின் மூலமாகவே ஏற்படுகிறது.

உள்ளதை உள்ளவாறு பார்த்து, உள்ளவாறு அறிந்து கொள்ளும் அறிநிலையானது...

முயற்சியால் நடைபெறுவதில்லை.

அது...

இயல்பாக நடக்க வேண்டியது.

அது...

இனிதான் நடக்க வேண்டும் என்பது கிடையாது. இப்போதும் அது நமக்குள்ளே இயங்கிக்கொண்டுதான் இருக்கிறது; நடந்து கொண்டுதான் இருக்கிறது. அதனை நாம் அடையாளம் கண்டு கொண்டால் போதுமானது. அதனை முயன்று சாதிக்கத் தேவையில்லை.

இந்தச் செய்திகளையெல்லாம் நமக்குள்ளே எடுத்து நாமாகவே அதனை விளங்கிக்கொள்ள வேண்டும். மற்றவர் கூறும் விளக்கம் பாதி அளவுதான் இருக்க முடியும்.

மீதியை நமக்குள்ளேதான் விளங்கிக்கொள்ள வேண்டும்.



# 13. மெய்ப் பொருள்

**நா**ம் நமது ஐந்து வகையான பொறி புலன்களின் வழியாக உணர்கிறோம். கண்ணால் பார்க்கிறோம்; காதால் கேட்கிறோம். இப்படி நமது ஐந்து பொறிகளின் வாயிலாக உணர்கிறோம்.

நமது மன உணர்வுகளை -

ஆறாவது புலனின் வழியாக உணர்ந்து வருகிறோம்.

இப்படி,

ஐந்து பொறிகள் இருப்பது போல் -

இந்த ஐந்து பொறிகளின் மூலம் செயல்படும் வகையில்,

ஐந்து விதமான வெவ்வேறு உணர்வுகள் உள்ளனவா?

அதாவது -

கண் மூலம் காட்சியை உணரும் உணர்வும் செவியின் மூலமாக இசையை உணரும் உணர்வும் வேறு வேறா?

இப்படி ஐந்து பொறிகளின் மூலமாக உணரும் உணர்வுகளெல்லாம் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டதா?

அல்லது -

ஒரே உணர்வுதான் பொறிகளுக்கு ஏற்றவாறு ஐந்து விதமாகப் பிரிவுபட்டுத் தோன்றுகிறதா?

நமக்குள்ளே இருப்பது ஒரே உணர்வுதான். அதுதான் ஐம்புலன்களாகவும் ஆறாவது புலனாகவும் செயல்படுகிறது.

இந்த உணர்வானது -

தனது அடி ஆழத்தில் அசைவற்ற தன்னுணர்வாக உள்ளது.

அதன் வெளிப்பரப்பில்...

இதுவே புலன் உணர்வாக உள்ளது.

வெளிப்புறத்தில் புலன் காட்சியின் மூலமாக அசைவுகள் ஏற்படுகின்றன.

இந்த அசைவுகள் யாவும் மேற்பரப்பில் மட்டுமே இடம் பெறுகின்றன. இந்த மேலோட்டமான உணர்வுகள் யாவும் மாறிக் கொண்டே இருக்கின்றன. தோன்றி மறைகின்றன.

நாம் காணும் பொருட்களுக்கேற்றவாறு காட்சி உணர்வும், கேட்கும்

ஓசைக்கேற்றவாறு செவி உணர்வும் மாறிக் கொண்டே இருக்கின்றன. நடைபெறும் நிகழ்ச்சிக்கு ஏற்றவகையில் நமது மன உணர்வுகளும் மாறிக்கொண்டே இருக்கின்றன. ஆனால் இந்த அடி உணர்வானது -

அசைவற்று நிற்கிறது; மாறுதலற்று நிற்கிறது

இது ஒன்றுதான் உண்மையானது.

மற்றவை அனைத்தும் அதன் மீது ஏற்படும் -

ஒரு தற்காலிகச் சலனமே.

இந்த அடி உணர்வு -

அசைவற்றது; அமைதியானது; அடர்த்தியானது; அளவிடமுடியாதது.

இது -

நமக்குள் நடுநாயகமாக உள்ளது; நம்முடைய மையமாக அமைந்துள்ளது.

இந்த அடி உணர்வு -

சாசுவதமானது; நிரந்தரமானது; உடல் அழிந்தாலும் இது அழிவதில்லை.

இது -

உங்களுக்கொன்று எனக்கொன்று என்று ஆளுக்கொரு அடியுணர்வாகக் கிடையாது.

இருப்பது ஒன்றே ஒன்றுதான். உங்களுக்குள்ளே இருப்பதும் எனக்குள்ளே இருப்பதும் ஒன்றே ஒன்றுதான்.

ஒன்று என்பதற்கு ஒன்று போல என்று பொருள் அன்று. ஒன்று போல என்பது இரண்டைக் குறிக்கும். இங்கு இரண்டே கிடையாது.

இருப்பது ஒன்றே ஒன்றுதான்.

இந்த -

அடி உணர்வு மட்டுமேதான்.

நான், நீ - என்பதெல்லாம் புறக்காட்சியே.

நான் என்று என்னை நான் கூறிக் கொள்ளும்போது, அது மெய்யாகச் சுட்டிக் காட்டுவது -

இந்த அடி உணர்வைத்தான்.

நான் என்று உங்களை நீங்களே கூறிக்கொள்ளும் போது நீங்கள் மெய்யாகச் சுட்டிக் காட்டுவதும் -

இந்த அடி உணர்வைத்தான்.

ஒவ்வொருவரும் தன்னைத் **தான்** என்று சுட்டிக் காட்டும் பொழுது

அவர்கள் மெய்யாகவே சுட்டிக் காட்டுவது

இந்த அடி உணர்வையே

இந்த அடி உணர்வு அனைவருக்கும் பொதுவானது என்ற கூற்றுக் கூட அநாவசியமானது.

பல என்பது இருந்தால்தான் அவற்றுக்கெல்லாம் பொது என்ற ஒன்று இருக்கமுடியும். பல என்பது வெறும் நிழல்களே; வெறும் தோற்றமே. அவை தோன்றும்; மறையும். அவற்றை ஆதாரமாகக் கொண்டு அடி உணர்வை விமர்சிப்பது தவறானது. அது, பொய்யை ஆதாரமாகக் கொண்டு உண்மையை அணுகுவதைப் போன்றதாகும்.

உண்மையில் இருப்பது ஒன்றே ஒன்றுதான். அதுதான் இந்த அடி உணர்வு; மெய்யுணர்வு; இது மெய்ப்பொருள்.

மெய்ப்பொருள் அனுபவத்தில் நான் - நீ என்ற பேதமில்லை. நான் என்பது கூடக் கிடையாது. நான் என்பது தன்னை இன்னொன்றிடமிருந்து பிரித்துப் பார்க்கும் உணர்வு.

இங்கு அத்தகைய பிரிவினை கிடையாது. இங்கு, நான் என்று நம்மைக் கருதாமலேயே நானாக இருக்கும் நிலை மட்டுமே உள்ளது. இங்கு,

அகம், புறம் என்ற பாகுபாடு கிடையாது.
இது, அது என்ற பிரிவினை கிடையாது.
நல்லது, கெட்டது என்ற வேறுபாடு கிடையாது.
வேண்டியது, வேண்டாதது என்ற முரண்பாடு கிடையாது.
இது -
அங்கு, இங்கு எனாதபடி எங்கும் நிறைந்துள்ளது.
ஆனந்த அம்சமாக உள்ளது.
ஆழ்ந்த - இறுக்கமான அமைதியாக உள்ளது.
அசைவற்ற இயக்கமாக உள்ளது.

